# மலர் வாசகம்

வரிசை ஐந்து

(ஐந்தாம் வகுப்புக்குரியது)

ஆசிரியர் :
**வித்துவான். ந. சண்முகம்**
தமிழாசிரியர், தொண்டைமண்டலம்
துளுவவேளாளர் உயர்நிலைப்பள்ளி, சென்னை.

APPROVED BY THE MADRAS TEXT-BOOK COMMITTEE
(*For class use in Elementary Schools*
*Vide Fort St. George Gazette dated 19-5-'54 Page 42.*)




ஸி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ்
சென்னை 1.

# முன்னுரை

மலர் வாசகம் என்னும் வாசக வரிசையுள் இது ஐந்தாம் வகுப்புக்கு உரியதாகும். இது அரசாங் கத்தார் வெளியிட்டிருக்கும் பாடத்திட்டத்திற்கு இணங்க எழுதப்பட்டுள்ளது.

நம் நாட்டுச் சிறுவர்கள் தாய்மொழியை எளிமை யாகவும், செம்மையாகவும் பயின்று, அதன்மூலம் சொல் லாற்றல், எழுத்துவன்மை, நல்லொழுக்கம் முதலியன பெற்று நன் மாணுக்கர்களாக விளங்குவதற் கேற்ற முறையில் தகுந்த பாடங்களைத் தேர்ந்தெடுத்து எழுதப் பட்டுள்ளன.

ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் அருஞ்சொற் பொருள், வினுக்கள், பயிற்சிகள் முதலியன கொடுக்கப் பட்டுள்ளன. அப்பயிற்சிகளை மாணவர்கள் பயில் வதன் மூலம் அவர்கள் அறிவு வளரும் என்பதில் ஐயமில்லை.

சிறுவர்களின் ஆர்வத்தைத் தூண்டும் வகையில் பாடல்களும், உரையாடல் முதலியனவும் சேர்க்கப் பட்டுள்ளன. பாடல்களைச் சேர்த்துக்கொள்ள அனுமதி தந்த அறிஞர்களுக்கு எனது நன்றி உரியதாகுக.

கல்வித் துறையினரும், ஆசிரியர்களும், பெரு மக்களும் இப்புத்தக வரிசையைப் போற்றிப் பாடமாக அமைத்து ஆக்கமளிக்குமாறு வேண்டிக் கொள்கிறேன்.

ஆசிரியர்.

## பொருளடக்கம்

# மலர் வாசகம்

(வரிசை ஐந்து)



## 1. கொடியைப் போற்றிக் கும்பிடு

பல்லவி

கொடியைப் போற்றிக் கும்பிடு
கொடுமை தீரும் நம்பு நீ

சரணம்

அச்சம் போக்கும் கொடி இது
ஆண்மைநல்கும் கொடி இது
இச்செ கத்து வாழ்வினை
இன்ப மாக்கும் கொடி இது (கொடி)

பரத நாட்டின் கொடி இது
பழமையான கொடி இது
விரத மாகப் போற்றினல்
விருப்பம் யாவும் சித்தியாம் (கொடி)

சத்தி யத்தின் கொடி இது
சக்தி தந்த கொடி இது
புத்தி மிக்க ஞானிகள்
பூசைசெய்த கொடி இது (கொடி)

மரணம் என்ற எண்ணமே
மனதிலின்றிச் செய்திடும்
திரணமாக எதையுமே
தியாகம் செய்யத் தந்திடும். (கொடி)

கட்டு விட்ட மக்களை
அன்பு கொண்டு கட்டியே
ஒற்றுமைப் படுத்தவே
உறுதியான கொடி இது. (கொடி)

சாதி பேதத் தீமையைச்
சாம்ப லாக்கும் கொடி இது
நீதி யான எதையுமே
நின்று காக்கும் கொடி இது (கொடி)

ஊழி தோறும் புதியதாம்
உறுதி கொண்ட கொடி இது
வாழி வாழி நம் கொடி
வாழ்க வாழ்க நாடெலாம் (கொடி)

— நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை.

---

அருஞ்சொற் பொருள்: கொடுமை தீரும் = துயரம் நீங்கும், ஆண்மை = வீரம்; நல்கும் = கொடுக்கும், இச்செகத்து = இவ்வுலகத்து, சக்தி = வலிமை, திரணம் = அற்பம், சத்தியம் = உண்மை, ஊழி = பல்லாண்டு.



## 2. இயேசுநாதர்

அரேபியா நாட்டின் மேற்குப் பாகத்தில் ஜெருசலேம் என்ற ஓர் ஊர் உண்டு. அங்கே யூதர்கள் என்ற ஒரு வகுப்பினர் இருந்தார்கள். அவ்வகுப்பில் ஜோசப் என்னும் பெரியாரும், மேரி என்னும் அம்மையாரும் வாழ்ந்து வந்தனர். அவர்களுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக் குழந்தைதான் அனைவராலும் போற்றப்படும் இயேசுநாதர் ஆகும். அவருக்கு இயேசு கிறித்து என்னும் வேறு பெயரும் உண்டு.



இயேசுநாதர் பிறக்கும் பொழுது பல நல்ல அறிகுறிகள் தோன்றின. குழந்தையைப் பார்த்த அறிஞர்கள் "இவர் ஒரு பெரிய உத்தமர்; இவரால் உலகம் நன்னிலை அடையும்" என்று புகழ்ந்தனர். மேரியம்மை ஈன்ற குழந்தையின் புகழைக் கேள்வியுற்ற அந்நாட்டு அரசன் அக்குழந்தையைக் கொல்லுவதற்குப் பல முயற்சிகள் செய்தான். ஆனால் அம் முயற்சி ஒன்றும் பயன்படவில்லை. குழந்தை நன்றாக வளர்ந்து வந்தது.

இயேசு, இளமையிலேயே இறைவனிடத்தில் அன்புடன் இருந்தார். நாட்டு மக்கள் மேற்கொள்ள வேண்டிய பல நல்லுரைகளைக் கூறினர். இயேசுவின் அறிவின் மாண்பையும், அன்பின் சிறப்பையும் கண்ட பலரும் அவரிடத்தில் அளவில்லாத அன்பு செலுத்தினர்.

இயேசுநாதர் ஒரு முறை நாற்பது நாட்கள் உண்ணு விரதம் இருந்து கடவுள் தன்மையை அடைந்தார். அவருடைய புகழ் மேலும் வளர்ந்தது. அவருடைய கொள்கைகளைப் பின்பற்றுவோர் நாளுக்கு நாள் அதிகரித்தனர். அவர் தாம் சென்ற இடங்களில் தம்மைக் காண வந்த மக்களுக்கு அறவுரைகள் கூறிவந்தார். இதை அறிந்த யூத மன்னன் இயேசுவின்மீது பல குற்றங்கள் சுமத்தினன். அதனல் அவர் அந்நாட்டு நீதி மன்றத்தில் விசாரிக்கப்பட்டார். முடிவாக அவரைச் சிலுவையில் அறைந்து கொல்ல வேண்டும் என்ற தண்டனையை நீதிமன்றம் விதித்தது.

உலகத்திற்கு வேண்டிய உயர்ந்த கருத்துக்களைக் கூறிய உத்தமர் இயேசுநாதர். அவர், சிலுவையில் நிற்க வைத்து ஆணி

அடித்துக் கொலை செய்யப்பட்டார். அவ்வாறு தம்மைக் கொலை செய்யும் நேரத்தில் கூட இயேசுநாதர் தம்மைப்பற்றி ஒரு சிறிதும் வருந்த வில்லை. தம்மைக் கொலை செய்பவர்களுக்காக மனம் வருந்தி, ஆண்டவனை



நோக்கி, "ஐயனே! இவர்கள், தாம் என்ன செய்கின்றோம் என்று தெரியாமல் இச்செயலைச் செய்கின்றார்கள். இவர்களைக் காப்பாற்றி அருள்புரிவீராக" என்று முறையிட்டார். இது ஒன்றே இயேசுநாதரின் உயர்வை விளக்கப் போதுமானதாகும்.

அன்பு, பொறுமை முதலிய நற்குணங்கள் மக்களிடம் வளரவேண்டுமென்று அவர் பாடு பட்டார். 'ஒரு கன்னத்தில் யாராவது உன்னை அறைந்தால் மற்றொரு கன்னத்தையும் அவருக்குக் காட்டு'' என்று கூறினார். பொறுமையின் பெருமையை இதனால் அறியலாம் அல்லவா ?

இயேசுநாதர் புகன்ற அரிய கருத்துக்கள் எல்லாம் 'பைபிள்' எனப்படும் நூலில் விரிவாக உள்ளன. அதுவே கிறித்துவர்களுடைய சிறந்த வேத புத்தகமாகும். இயேசுவின் கொள்கைகளைப் பின்பற்றி வாழ்பவர்கள் கிறித்துவர் எனப்படுவர்.

இப்போழுது நாம் கூறுகின்ற ஆண்டுகள் கிறித்து பிறந்த காலத்திலிருந்து கணக்கிடப் படுவனவாகும். கிறித்து பிறப்பதற்கு முன் நடந்த சரித்திர நிகழ்ச்சிகளைக் குறிப்பிடும் போது கி. மு. இன்ன ஆண்டு என்றும், கிறித்து பிறந்த பிறகு நடைபெற்ற நிகழ்ச்சிகளைக் கி. பி. இன்ன ஆண்டு என்றும் குறிப்பிடுவது வழக்கம். நாம் வாழும் இந்நூற்றாண்டைக் கி. பி. இருபதாம் நூற்றாண்டு என்று சொல்லுகிறோம்.

---

அருஞ்சொற் பொருள்: போற்றப்படும் = புகழப்படும், அறிகுறி = அடையாளம், நன்னிலை = உயர்ந்த பதவி, மாண்பு = பெருமை, முறையிட்டார் = வேண்டினர், புகன்ற = சொன்ன.

### வினாக்கள்

1. இயேசுநாதர் பிறந்த ஊர் எது? அது எங்கே உள்ளது?
2. இயேசுநாதரின் பெருமைகளை எழுது.
3. இயேசுநாதரால் ஏற்படுத்தப்பட்ட மதத்தின் பெயர் என்ன?
4. 'பைபிள்' என்பது என்ன?
5. கி. பி.; கி. மு. என்றால் என்ன?

### பயிற்சிகள்

1. உத்தமர், கொள்கை, அருள்புரிவீர் — இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.
2. இயேசுநாதரைப் பற்றிப் பத்து வரிகளில் எழுது.
3. குழந்தை நன்றாக வளர்ந்து வந்தது—இதிலுள்ள எழுவாய் பயனிலைகளை எழுது.
4. குழந்தை, அரசன், ஆண்டு, நல்லுரை—இவற்றைப் பன்மைகளாக எழுது.
5. இப்பாடத்திலிருந்து நான்கு பெயர்ச்சொற்களும் நான்கு வினைச்சொற்களும் எழுது.



## 3. வீட்டுத் தோட்டம்

எங்கள் ஊரின் பெயர் பாலூர் என்பது. அங்கே பல தெருக்கள் இருக்கின்றன. எங்கள் வீடு அம்மையப்பர் தெருவில் இருக்கிறது. எங்கள் வீடு ஒரு சிறிய வீடு. அதைச் சுற்றிலும் தோட்டம் இருக்கிறது. அத்தோட்டத்தில் நானும் என் அண்ணனும் சேர்ந்து தினமும் காலை மாலை இருவேளைகளிலும் சிறிது நேரம் வேலை செய்வோம். எங்கள் வீட்டுக்குத் தேவையான காய் கறிகளையும் வாழை இலையையும் நாங்கள் எங்கள் தோட்டத்திலிருந்தே பெறுகின்றோம். நாங்கள் எவ்வாறு தோட்ட வேலை செய்கின்றோம் என்பதை உங்களுக்குத் தெரிவிக்கின்றோம். நீங்களும் அவ்வாறே தோட்டவேலை செய்து நன்மை பெறுங்கள்.

நாங்கள் முதலில் தோட்டத்தை மண் வெட்டியால் கொத்துவோம். அப்படிச் செய்வதனால் நிலத்தின் மேலுள்ள மண் கீழும், கீழுள்ள மண் மேலும் மாறி வளமடையும். பிறகு ஒரு பகுதியில் பாத்திகள் அமைப்போம். அங்கே கீரை வகைகள் ஒரு பக்க

மும், கத்தரி, வெண்டை, தக்காளி முதலான செடி வகைகள் ஒரு புறமும் பயிராக்குவோம். மற்றொரு பகுதியில் அவரை, புடலை, பீர்க்கு முதலான கொடி வகைகளைப் பயிர் செய்வோம். அக் கொடிகள் நன்ருகப் படரத் தொடங்கியவுடன் அவை காய்ப்பதற்கு ஏற்றவாறு பந்தல் போடுவோம்.



மற்றொரு பகுதியில் இரண்டடி ஆழமுள்ள சில குழிகள் தோண்டி அவற்றில் எருபோட்டுப் பிறகு வாழையை நடுவோம். இன்னொரு பக்கத்தில் எங்கள் தங்கைக்கும் அக்காளுக்கும் வேண்டிய பூக்களைப் பெறுவதற்காக மல்லிகை, கனகாம்பரம், ரோஜா முதலான பூச் செடிகளைப் பயிரிடுவோம்.

இவற்றிற்கு நாங்கள் தினமும் காலையும் மாலையும் கிணற்றிலிருந்து நீர் பாய்ச்சுவோம். தினமும் அச்செடி கொடிகள் எல்லாம் நன்ருக முளைத்து வளர்ந்து வருகின்றனவா என்று பார்த்துக்கொண்டே வருவோம். அவை பூத்துக் காய்க்கத் தொடங்கும்போது நாங்கள் அடையும் மகிழ்ச்சிக்கு ஓர் அளவே இராது.

எங்கள் முயற்சி, மலராகவும். காயாகவும் பயன்படத் தொடங்கியவுடன் எங்கள் பெற்ரேர் எங்களை மிகவும் பாராட்டுவர். தினமும் எங்கள் வீட்டுக்கு வேண்டிய காய் கறிகளை நாங்களே பறித்துக் கொடுப்போம். எங்கள் முயற்சியால் கிடைத்த காய் கறிகளை நாங்கள் உண்ணும்போது எங்களுக்கு எவ்வளவு ஆனந்தமாக இருக்கும் தெரியுமா ?

தினமும் எங்கள் தங்கை பள்ளிக்கூடம் செல்லும்போது எங்கள் வீட்டுத் தோட்டத்தில் பூத்த மலர்களைத் தலையில் சூடிக் கொண்டு செல்வாள். அவளுடன் படிக்கும் மாணவிகளுக்கும் அவள் பூக் கட்டிக் கொடுப்பாள்.

இவ்வாறு தினமும் தோட்டத்தைக் கவனித்துக்கொண்டு வந்தோம். படிப்பிலும்

நன்ருகக் கவனம் செலுத்தி வந்தோம். இவ்வாறு, தினமும் நாங்கள் தோட்ட வேலை செய்து வந்தமையால் அடைந்த நன்மைகள் பல. தோட்டவேலை செய்யும்போதே உடற் பயிற்சியும் செய்துவிடுகின்ரேம். அதஞல் ஒரே காலத்தில் இரண்டுவித நன்மைகள் எங்களுக்கு உண்டாயின. செடி, கொடி முதலானவைகள் முளைக்கும் விதமும், வளரும் விதமும், பலன்தரும் முறையும் எப்படி என்ற கேள்விகளுக்கு நாங்கள் நல்ல பதில்களைக் கூறவும் கற்றுக்கொண்டோம்.

நீங்களும் உங்கள் வீடுகளைச் சுற்றிலும் வெற்றிடம் இருந்தால் தோட்டம் உண்டாக்குங்கள். நாங்கள் சொன்னபடி செய்து பழகுங்கள். நல்ல பயனைப் பெறலாம். வீண் பொழுது போக்காமல் வீட்டிற்குத் தேவையான தோட்டம் அமைத்துக் காய் கறிகளைப் பயிரிடுங்கள். அதிகமாகப் பயிராஞல் அவற்றை விலைக்கு விற்றுப் பணமும் பெறலாம். உடல் வன்மை பெற்று உயர்வும் அடையலாம்.

வீட்டுக்கு ஒரு தோட்டம் அமைத்து நாட்டுக்குத் தொண்டு புரிவது நமது கடமையாகும்.

---

அருஞ்சொற் பொருள் : வெற்றிடம் = காலி இடம்.

## வினாக்கள்

1. தோட்டத்தில் செடிகள் நடுவதற்குமுன் என்ன செய்யவேண்டும் ? ஏன் ?
2. தோட்டத்தில் என்னென்ன செடிகள் பயிரிட லாம் ?
3. வீட்டில் தோட்டம் ஏற்படுத்துவதனால் உண்டா கும் நன்மைகள் யாவை ?

## பயிற்சிகள்

1. ஏற்றவாறு, மகிழ்ச்சி, முயற்சி இவற்றைச்சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.
2. பூ, கொடி, மலர், தெரு — இவற்றைப் பன்மைக ளாக்கு.
3. பொருத்தி எழுது :—

| | |
|---|---|
| மண்வெட்டியால் | பறிப்போம் |
| கிணற்றிலிருந்து | கவனம்செலுத்தினோம் |
| பூக்களை | கொத்துவோம் |
| படிப்பில் | நீரிறைப்போம் |

4. ஒரு தோட்டம் அமைக்க என்னென்ன கருவிகள் வேண்டும் என்று ஓர் அட்டவணை தயார் செய். அவற்றின் வேலையையும் எழுது.

## 4. ஒற்றுமையின் உயர்வு

ஓர் ஊரில் ஒரு பெரியவர் இருந்தார். அவருக்கு நான்கு பிள்ளைகள் இருந்தார்கள். அந்நால்வரும் தந்தையின் பேச்சுக்கு அடங்கி நடந்து வந்தார்கள். ஆனல், அவர்களுக்குள் ஏதாவது ஒரு காரணத்தால் அடிக்கடி சண்டை ஏற்பட்டுவிடும். அவர்களுடைய தந்தை அவர்கட்கு நல்ல வார்த்தைகள் சொல்லி ஒற்றுமையாக வாழ வேண்டிய அவசியத்தை விளக்கிக்கொண்டு வந்தார்.

ஒரு நாள் அவர் தன் பிள்ளைகள் நால்வரையும் அருகில் அழைத்தார். விறகுக்கட்டு ஒன்றை எடுத்துக்கொண்டு வருமாறு சொன்னர். ஒருவன் சென்று ஒரு விறகுக்கட்டை எடுத்துக்கொண்டு வந்து தந்தையின் முன் வைத்தான். எதற்காக விறகுக்கட்டை எடுத்து வரச்சொன்னர் என அவர்கள் எண்ணிக்கொண்டிருந்தனர்.

பெரியவர் தம் பிள்ளைகள் நால்வருள் முதல்வனை அழைத்து, "இந்த விறகுக் கட்டை எடுத்து அவிழ்க்காமல் அப்படியே ஒடி" என்று கூறினர். முதற்பிள்ளை தந்தையின் கட்டளைப்படி அவ்விறகுக் கட்டை ஒடிக்க முயன்ருன், முடியவில்லை. "தந்தையே! என்

ளுல் முடியவில்லை'' என்று கூறினுன். பிறகு, மற்ற மூவரையும் அதைப்போலவே செய்யும் படிக் கூறினர் பெரியவர். அவர்களும் தனித் தனியாக முயன்று பார்த்து '' என்னுல் முடியவில்லை'', ''என்னுல் முடியவில்லை'' எனக் கூறிவிட்டார்கள்.



''சரி ! இப்பொழுது இந்தக் கட்டை அவிழ்த்து, நால்வரும் ஒவ்வொரு விறகை

எடுத்துக்கொள்ளுங்கள்'' என்ருர். அப்படியே அக்கட்டை அவிழ்த்து நால்வரும் ஒவ்வொரு விறகை எடுத்துக்கொண்டனர்.

''இப்பொழுது இதை ஒடியுங்கள்'' என்ருர். உடனே நான்கு பேரும் நொடிப்பொழுதில் அதை ஒடித்து விட்டார்கள். இதைப் பார்த்த அப்பெரியவர். ''இப்பொழுது என்ன தெரிந்துகொண்டீர்கள்?'' என வினவினர். பிள்ளைகள் ஒன்றும் பேசாமல் நின்றனர்.

பெரியவர் அவர்களைப் பார்த்து ''ஒற்றுமையினல் உண்டாகும் நன்மையையும்,ஒற்றுமை இல்லாமலிருந்தால் ஏற்படும் தீமையையும் உங்களுக்கு விளக்குவதற்காகத்தான் இவ்வாறு செய்யச் சொன்னேன். விறகுகள் கட்டாக இருந்தபோது உங்களால் ஒடிக்க முடியவில்லை. தனித்தனியாக இருந்தபொழுது அதை எளிதில் ஒடித்துவிட்டீர்கள். இதனல் நீங்கள் நால்வரும் ஒற்றுமையுடன் இருந்தால் உங்களை யாரும் ஒன்றும் செய்ய முடியாது. நீங்கள் ஒற்றுமையாக இல்லாமல் சண்டை போட்டுக்கொண்டு வாழ்வீர்களாகுல் மற்றவர்கள் எளிதில் உங்களைத் தோற்கடித்து விடுவார்கள் என்பது விளங்குகிறதல்லவா''? என்ருர்.

மேலும், "இதுபோலவே ஒவ்வொரு நாட்டிலும் மக்கள் ஒற்றுமையாக வாழ வேண்டும். எந்த நாட்டில் மக்கள் ஒற்றுமையில்லாமல் தங்களுக்குள் சண்டை போட்டுக்கொண்டு வாழ்கின்றார்களோ, அந்த நாடு விரைவில் மற்ற நாட்டவரால் கைப்பற்றப் படும். ஆகையால் வீட்டிலும் ஒற்றுமை வேண்டும், நாட்டிலும் ஒற்றுமை நிலவ வேண்டும்" என்று கூறி முடித்தார்.

தந்தை சொன்னவற்றைக் கேட்ட நால்வரும் ஒற்றுமையினால் உண்டாகும் நன்மையை அறிந்துகொண்டு, "தந்தையே! இனிமேல் நாங்கள் ஒற்றுமையாகவே வாழ்வோம், எதற்கும் சண்டை போடமாட்டோம். நீங்கள் எங்களுக்குத் தெரிவித்த ஒற்றுமையின் சிறப்பை நாங்கள் நன்றாக உணர்ந்து கொண்டோம். நாட்டிலும் ஒற்றுமைவளரப் பாடுபடுவோம். உங்களுடைய அறிவுரைக்கு எங்கள் நன்றி உரியது" என்றனர். அன்று முதல் அவர்கள் ஒற்றுமையாக வாழ்ந்து வந்தார்கள்.

*'ஒன்றுபட் டாலுண்டு வாழ்வு—நம்மில்*
*ஒற்றுமை நீங்கிடில் அனைவர்க்கும் தாழ்வே.*

— பாரதியார்.

அருஞ்சொற் பொருள் : வியந்து = ஆச்சரியப்பட்டு, அறிவுரை=புத்திமதி.

## வினாக்கள்

1. தந்தை தன் பிள்ளைகளுக்கு என்ன கூறினர்? ஏன்?
2. பெரியவர் பிள்ளைகளுக்கு ஒற்றுமையின் அவசியத்தை எப்படி எடுத்துக் காட்டினர்?
3. விறகுக்கட்டை பிள்ளைகளால் ஒடிக்க முடிந்ததா? ஏன்?
4. இப் பாடத்தினல் தெரிந்துகொள்ளும் உண்மை என்ன?

## பயிற்சிகள்

1. 'தந்தையே, என்னல் முடியவில்லையே' என்று கூறினன் — இது என்ன வாக்கியம்?
2. வியந்து, தனித்தனி, அறிவுரை — இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.
3. நேற்று வருவான், நாளை வந்தேன் — இவ்வாறு எழுதுவது சரியா? எப்படி இருக்க வேண்டும்? திருத்தி எழுது.
4. வாழ்வோம் — இது என்ன காலம்? இதை மற்ற காலங்களில் மாற்றி எழுது.



## 5. தாய்நாடு காத்த தனயன்

ஐரோப்பாவில் பல தேசங்கள் உள்ளன. அவற்றுள் ஹாலந்து தேசம் என்பது ஒன்று. ஹாலந்து தேசம் கடல் மட்டத்திற்குக் கீழே உள்ளது. கடல் பொங்கினால் ஹாலந்து அழிந்து விடும். அதனால், கடல் நீரால் ஆபத்து ஏற்படாமல் இருப்பதற்காக ஹாலந்தில் பெரிய அணை ஒன்று கட்டப்பட்டுள்ளது.

அந்த அணைக்கட்டுக்குச் சமீபத்தில் ஒரு பள்ளிக்கூடம் இருந்தது. அந்தப் பள்ளிக் கூடத்திலே ஒரு ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்த ஜேம்ஸ் என்பவன் படித்துக்கொண்டிருந்தான். அவன் ஒரு நாள் தன் பள்ளிக் கூடத்தை விட்டு வீட்டிற்குப் போகின்றபோது அணைக்கட்டில் சிறு துவாரம் ஏற்பட்டுள்ளதைக் கண்டான்.

எத்தனையோ மாணவர்கள் அணைக் கட்டிலே துவாரம் ஏற்பட்டுத் தண்ணீர் கசிவதைக் கண்டார்கள். அவர்கள் அணைக் கட்டிலே துவாரம் ஏற்பட்டுள்ளதைப் பற்றியும் நீர் கசிவதைப்பற்றியும் கவலைப்படவில்லை.

ஆனால், ஜேம்ஸ் "அந்த அணைக்கட்டிலே உள்ள சிறு துவாரம் பெரியதாகும். அதனால்

அணை உடைந்து ஹாலந்து தேசமே தண்ணீரில் மூழ்கி விடும்" என்று எண்ணினுன். அப்பொழுது இருட்டும் நேரம். நகர்க் காவலர்களை அழைப்பதற்கும் நேரம் இல்லை. "நாம் நம் தாய்நாட்டைக் காப்பாற்ற இந்த அணைக் கட்டில் உள்ள துவாரத்தில் நம் கையை வைத்து அழுத்தித் தண்ணீர் வெளிவராமல் செய்ய வேண்டும்" என்று எண்ணினுன். அதன்படியே கையைத் துவாரத்தில் வைத்துத் தண்ணீர் வராமல் தடுத்தான்.



இரவு நேரம் ஜேம்ஸோ சிறுவன். அவனுக்கு இரவில் தனியாயிருப்பது அச்சமாயிருந்தது. ஆயினும் நாடு தண்ணீரில் மூழ்கிஞல் என்ன செய்வது? அதஞல் அவன் தன் கையை அத்துவாரத்தில் இருந்து எடுக்காமல் இரவு முழுவதும் அங்கேயே அஞ்சாமல் தனியாக இருந்தான்.

இரவு கழிந்து நகரமக்கள் உறக்கத்திலிருந்து விழித்தெழுந்தனர். ஜேம்ஸின் வீட்டிலோ

அவன் தாய் தந்தையர்கள், ஜேம்ஸ் பள்ளிக் கூடத்திலிருந்து வராத காரணத்தால் கவலைப் பட்டுக்கொண் டிருந்தனர். ஜேம்ஸின் தந்தை, தன் ஒரே மைந்தனைத் தேடித் தேடி ஊரெல்லாம் அலைந்தார். கடைசியில் அணைக் கட்டு வழியாகத் தேடிக்கொண்டு வந்தார். அங்கே ஜேம்ஸ் அணையருகே சோர்ந்து கிடப் பதைக் கண்டார். அவர் ஜேம்ஸின் அருகில் செல்வதற்கும், ஜேம்ஸின் உயிர் அவன் உடலை விட்டுப் பிரிவதற்கும் சரியாக இருந்தது.

தாய் அலறினாள்; தந்தை கதறினார்; ஊரார் வருத்தப்பட்டனர். தாய் நாட்டைக் காப்பதற்காக ஜேம்ஸ் தன் உயிரைக் கொடுத்தான். பலர் உயிரைக் காக்கத் தன் உயிரைத் தியாகம் செய்த ஜேம்ஸ் மண் ணிலே புதைக்கப்பட்டான். அவன் புகழ் புதைக்கப்படவில்லை. இன்றும் அவன் புகழ் பலராலும் பாராட்டப்படுகிறது. இத்தகைய செயல்தான் சிறந்த தியாக மெனப்படும்.

---

அருஞ்சொற் பொருள்: *தியாகம் = பொருள், உயிர் முதலியவற்றைப் பிறர் நன்மைக்காக இழத்தல்.*

### வினாக்கள்

1. ஹாலந்து தேசத்தில் பெரிய அணை கட்டப்பட்டிருப்பது ஏன்?
2. ஜேம்ஸ் பள்ளியிலிருந்து திரும்பி வரும்போது என்ன கண்டான்? என்ன செய்தான்?
3. தாய்நாடு காத்த தனயன் யார்? அப்பெயர் எவ்வாறு பொருந்தும்?

### பயிற்சிகள்

1. படித்தான் என்பது நேற்று படித்தான் என்று நடந்ததைக் குறிக்கிறது. அதனால் அது இறந்தகாலம். நடப்பதைக் குறிப்பது நிகழ் காலம் ஆகும். உ-ம். படிக்கிறான். நடக்கப் போவதைக் குறிப்பது எதிர்காலம் ஆகும். உ-ம். படிப்பான். இவற்றைத் தெரிந்து கொண்டு கீழுள்ள அட்டவணையைப் பூர்த்தி செய்.

| இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் |
|---|---|---|
| உண்டான் | —— | —— |
| நடந்தார் | —— | —— |
| செய்தான் | —— | —— |
| தடுத்தான் | —— | —— |



## 6. யாவர்க்கும் ஒன்று

ஊருக்கு நல்லது சொல்வேன் — எனக்கு
உண்மை தெரிந்தது சொல்வேன் ;
சீருக்கெல் லாம்முத லாகும் — ஒரு
தெய்வம் துணைசெய்ய வேண்டும்.

வெள்ளை நிறத்தொரு பூனை — எங்கள்
வீட்டில் வளர்வது கண்டீர் !
பிள்ளைகள் பெற்றதப் பூனை — அவை
பேருக் கொருநிற மாகும்.

சாம்பல் நிறம்ஒரு குட்டி — கருஞ்
சாந்து நிறமொரு குட்டி ;
பாம்பு நிறம்ஒரு குட்டி — வெள்ளைப்
பாலின் நிறம்ஒரு குட்டி.

எந்த நிறம்இருந் தாலும் — அவை
யாவும் ஒரேதரம் அன்றோ !
இந்த நிறம்சிறி தென்றும் — இஃது
ஏற்றம்என்றும் சொல்ல லாமோ ?

வண்ணங்கள் வேற்றுமைப் பட்டால் — அதில்
மானிடர் வேற்றுமை இல்லை ;
எண்ணங்கள் செய்கைகள் எல்லாம் — இங்கு
யாவர்க்கும் ஒன்றெனல் காணீர்.

— சுப்பிரமணிய பாரதியார்.

அருஞ்சொற் பொருள் : சீருக்கு = சிறப்புக்கு, ஏற்றம் = உயர்வு, வண்ணம் = நிறம், தரம் = தன்மை, வேற்றுமை = வேறுபாடு.

### வினாக்கள்

1. மனிதர்களுக்குள் வேற்றுமை கூடாது என்பதற்கு என்ன உதாரணம் சொல்லப்பட்டுள்ளது?

2. இங்கு யாவர்க்கும் ஒன்று—எவை?

### பயிற்சிகள்

1. பூனை வளர்கிறது — இதைப் பன்மை வாக்கியமாக மாற்று.

2 குமரன் — இப் பெயர்ச்சொல் ஓர் ஆண்மகனைக் குறிக்கிறது. அதனால் ஆண்பால் எனப்படும்.

வள்ளி — இப்பெயர் ஒரு பெண்ணைக் குறிக்கிறது. அதனால் இது பெண்பால் எனப்படும்.

மாணவர்கள் — பலரைக் குறிப்பதனால் இது பலர் பால் எனப்படும்.

பூனை — உயர்திணையல்லாத ஒன்றைக் குறிப்பதனால் இது ஒன்றன்பால் எனப்படும்.

பூனைகள் — பலவற்றைக் குறிப்பதனால் பலவின் பால் எனப்படும். இவை ஐந்து பால்கள் எனப்படும். இவற்றைத் தெரிந்துகொள்.



# 7. கிராமப் பஞ்சாயத்து

இந்தியாவில் பல இலட்சக்கணக்கான கிராமங்கள் இருக்கின்றன. நம் நாட்டின் முன்னேற்றத்திற்குக் கிராமங்களே அடிப் படையாகும். கிராமங்களை நல்ல முறையில் வைத்துக்கொள்வதற்கும், கிராம மக்களுக் குள் ஏற்படும் வழக்குகளைத் தீர்ப்பதற்கும் ஒரு சபை உண்டு. அதற்குக் கிராமப் பஞ்சா யத்துச் சபை என்று பெயர்.

நம் நாட்டில் கிராமப் பஞ்சாயத்து முறை பழைய காலத்தில்கூட நடைபெற்று வந் துள்ளது. இப்பொழுது பஞ்சாயத்து உறுப்பி னர்களைக் கிராம மக்களே தேர்ந்தெடுக்கிறார் கள். ஒவ்வொரு கிராமத்திலும் மக்கள் தொ கைக்கு ஏற்றவாறு இத்தனை இத்தனை அங்கத் தினர்கள் இருக்கவேண்டுமென்று தீர்மானிப் பார்கள். அதன்படியே ஒவ்வொரு கிராமத் தாரும் அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுப்பார் கள். இருபத்தோரு வயதுக்கு மேற்பட்ட ஆண்பெண் எல்லோருக்கும் 'ஓட்டு' எனப் படும் வாக்குரிமை வழங்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு கிராமத்திலும் அதனதன் தகு திக்கு ஏற்பத் தொகுதிகள் பிரிக்கப்பட்டு, ஒரு

தொகுதிக்கு ஒருவர் வீதம் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும்.

உதாரணமாக, ஓர் ஊரில் பன்னிரண்டு தொகுதிகள் இருப்பதாக வைத்துக்கொள்வோம். அங்கே பன்னிரண்டு அங்கத்தினர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். ஒரு தொகுதியில் மூன்றுபேர் போட்டியிடுவதாக இருந்தால், வாக்குரிமை பெற்றுள்ளவர் அனைவரும் வாக்குரிமையைப் பதிவு செய்யும் இடத்திற்கு வந்து தங்கள் வாக்கை (ஓட்டை) யாருக்கு விருப்பமோ அவருக்காக ஒதுக்கப்பட்ட பெட்டியில் போட்டுவிட்டுச் செல்ல வேண்டும். பிறகு அவற்றை எண்ணுவர். யாருக்கு நிறைய வாக்குகள் கிடைத்துள்ளனவோ அவரே வெற்றி பெற்றவராவர். இவ்வாறே ஒவ்வொரு தொகுதிக்கும் தேர்தல் நடைபெறும். அதன் தலைவரையும் இதே போல அவ்வூர் மக்கள் அனைவரும் சேர்ந்து தேர்ந்தெடுப்பார்கள். துணைத் தலைவரை மக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்ற அங்கத்தினர்கள் தேர்ந்தெடுப்பார்கள்.

பஞ்சாயத்துச் சபையின் தலைவரும் உறுப்பினர்களும் அடிக்கடி கூடி, கிராமத்தினருக்குச் செய்யவேண்டிய செயல்களைப்

பற்றி ஆலோசனை செய்து சேவை செய்வார்கள். மக்களிடமிருந்து வரி வசூல் செய்வதும், வசூலித்த பணத்தைக்கொண்டு மக்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்வதும், சிறிய வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பளிப்பதும் அவர்களுடைய முக்கியமான கடமைகளாகும்.



சுகாதார ஏற்பாடுகள் செய்வது, மருத்து வச்சாலை ஏற்படுத்துவது, பாதைகளை அமைப்பது, கிணறு வெட்டுவது, நூல் நிலையமும் படிக்கும் இடமும் ஏற்படுத்துவது, வீதிகளில் விளக்கேற்றச் செய்வது, பள்ளிக்கூடங்களைக்

கவனிப்பது, பூங்காவும் வாஞெலியும் அமைப்பது, விவசாயத்துக்கு வேண்டிய வசதிகளை ஏற்படுத்துவது முதலிய செயல்கள் கிராமங்களின் முன்னேற்றத்திற்கு வேண்டியவைகளாகும்.

கிராமங்கள் நல்ல முறையில் சிறப்புடன் விளங்கவேண்டுமாஞல் இத்தகைய பஞ்சாயத்துச் சபைகள் நல்ல முறையில் நடக்க வேண்டும். மக்களுடைய ஒற்றுமையும், ஊக்கமும், உறுப்பினர்களின் ஆர்வமும் குறையாமல் இருக்கவேண்டும். கிராம முன்னேற்றம் ஒன்றையே நோக்கமாகக் கொண்டு பஞ்சாயத்துச் சபைகள் பாடுபடவேண்டும். இவ்வாறு ஒவ்வொரு கிராமமும் முன்னேறிஞல் நமது நாடு உயர்வடையும்.

மகாத்மா காந்தியடிகள் "கிராமங்களே இந்தியாவின் உயிர்நாடிகள், ஆகையால் கிராமங்கள் முன்னேற்றம் அடையவேண்டும்" என்று கூறியிருப்பதை எல்லோரும் உணர்ந்து, அவ்வாறே செய்ய முயற்சிக்க வேண்டும். அதற்குக் கிராமப் பஞ்சாயத்துச் சபைகள் நல்ல முறையிலே உதவி புரியும்.

---

அருஞ்சொற் பொருள்: உறுப்பினர் = அங்கத்தினர், தொகை = எண்ணிக்கை, வழக்கு = சண்டை, பூங்கா = சோலை, ஆர்வம் = ஆவல்.

## வினாக்கள்

1 கிராமப் பஞ்சாயத்துச் சபை என்றால் என்ன?

2. வாக்குரிமை என்றால் என்ன?

3. பஞ்சாயத்துத் தலைவரையும் துணைத்தலைவரையும் தேர்ந்தெடுக்க வேண்டியவர் யார்?

4. பஞ்சாயத்துச் சபையின் முக்கிய கடமைகளை எழுது.

5. கிராம முன்னேற்றத்திற்கு என்னென்ன செய்ய வேண்டும்?

6. காந்தியடிகள் கிராமங்களைப்பற்றிக் கூறியிருப்பது என்ன?

## பயிற்சிகள்

1. உங்கள் ஊரில் ஒரு நூல் நிலையம் ஏற்படுத்துமாறு பஞ்சாயத்துத் தலைவருக்கு ஒரு கடிதம் எழுது.

2. தலைவன், குடை, பூ, விலங்குகள், அரசி, கண்ணன், உறுப்பினர்கள், உறுப்பு, பழங்கள், ஔவை — இவை என்னென்ன பால்கள்? அட்டவணை தயாரித்து எழுது.



# 8. செஞ்சிக் கோட்டை

நமது நாட்டில் சரித்திரப் புகழ்பெற்ற பழம் பெருமை வாய்ந்த இடங்கள் பல இருக்கின்றன. அவற்றுள் செஞ்சிக் கோட்டையும் ஒன்று. செஞ்சி, தென்னார்க்காடு மாவட்டத்திலே உள்ள ஓர் ஊர். அவ்வூர் சங்கராபரணி ஆற்றின் கரையில் அமைந்துள்ளது.

அவ்வூருக்கு மேற்கே ஒரு மைலில் மூன்று மலைகள் ஆய்த எழுத்தைப்போல (ஃ) அமைந்து இருக்கின்றன. அம்மலைகளில் ஒன்றில் வலிமை மிக்க கோட்டை ஒன்று கட்டப்பட்டு இருக்கிறது. தேசிங்கு மன்னன் அங்கேதான் இருந்தான். அம்மலையைச் சுற்றிலும் காடு இருக்கின்றது. இயற்கைப் பாதுகாப்பான காடு உள்ள அவ்விடத்தில் பகைவர்கள் எளிதில் நுழைய முடியாதபடி கோட்டையின் அமைப்பு இருக்கிறது. மலையடிவாரத்தில் சேனைவீரர்கள் தங்கும் இடமும் போர்க்கருவிகள் வைக்குமிடமும், தானியக் களஞ்சியங்களும், போர்வீரர்கள் பயிற்சி செய்யும் இடமும், ஓர் அலயமும், கல்யாண மண்டபம் ஒன்றும் அமைந்துள்ளன.

எதிரிகள் படையெடுத்து வந்தால் சுலபமாக உள்ளே நுழைய முடியாதபடி வளைந்து

வளைந்து செல்லும் வழி காணப்படுகிறது : ஆங்காங்கே வீரர்கள் மறைந்து நின்று எதிரிகளைத் தாக்குவதற்கு ஏற்றவாறு அது அமைந்துள்ளது. அவ்வழியாக மலைமீது ஏறவேண்டும். உயரமான அம்மலையின் உச்சியில் பலவித



வசதிகளும் அமைந்த கோட்டை இருக்கிறது. அக்கோட்டையில் கொலுமண்டபம், அறிஞர்கள் கூடி ஆலோசனை செய்யும் இடம், தானியக் களஞ்சியம், ஆலயம், மணி அறிவிக்கும் மண்டபம் முதலானவை இருக்கின்றன. மலை மீது நன்னீர் அளிக்கும் சுனை ஒன்று உள்ளது.

அச் சுனைநீரும், மெல்லிய காற்றும் மலைமீது செல்பவர்க்குப் புத்துணர்ச்சியை ஊட்டுவன வாகும்.

அம்மலையின்மீது ஏறுவது கொஞ்சம் கடினமாகத்தான் இருக்கும். செங்குத்தான படிக்கட்டுகள் சில இடங்களில் இருக்கின்றன. இக்கோட்டை அமைந்துள்ள அம்மலைக்கு இராஜகிரி என்பது பெயர் அதன் வடபாகத்தில் கிருஷ்ணகிரி அல்லது இராணிமலை என்ற பெயரோடு ஒருமலை இருக்கிறது. அதன்மீதும் பல கட்டிடங்கள் இருக்கின்றன. அவற்றுள் அழகான வசந்த மண்டபம் ஒன்று உள்ளது. அதனருகில் ஓர் ஆலயமும் இருக்கின்றது. அம்மலையில் ஏறுவதற்கும், இறங்குவதற்குமாகத் தனித்தனிப் படிக்கட்டுகள் உள்ளன. ஆனால், ஒன்று சிதைந்து கிடக்கிறது.

இராஜகிரிக்குக் கிழக்குப் பக்கமாக ஒரு மலை இருக்கிறது. அதன்மீதும் சில கட்டிடங்கள் உள்ளன. இம்மூன்று மலைகளையும் சேர்த்தாற்போல ஒரு நீண்ட மதில் அமைக்கப்பட்டுள்ளது. அது மதிலரண் ஆகும். அதன் பக்கத்தில் நீர்அரண் ஆன அகழியும் உள்ளது.

சரித்திரப் புகழ்பெற்ற இந்த இடத்திலே பல சண்டைகள் நடந்திருக்கின்றன. அச் சண்டைகளின் காரணமாக அக்கோட்டை சிதைந்து கிடக்கிறது. ஒருகாலத்தில் மிகவும் சிறப்புற்ற நகரமாக விளங்கிய செஞ்சி இன்று ஒரு சிறிய நகரமாகக் காணப்படுகிறது. ஆயினும் அந்நகரத்தின் புகழ் இன்றும் கோட்டையின் மூலமாகப் பரவி வருகிறது.

செஞ்சிக்கு அருகில் சிங்கபுரம் என்னும் ஒரு சிற்றூர் இருக்கிறது. அங்கே இருக்கும் குன்றின்மீது அரங்கநாதர் கோவில் ஒன்று இருக்கிறது. தேசிங்கு மன்னன் அன்புடன் அப்பெருமானையே தினமும் வழிபட்டு வந்தான் என்று அவனுடைய வரலாற்றால் தெரிகிறது.

செஞ்சிக்கோட்டையையும் அதுபோன்ற சரித்திரப் புகழ்பெற்ற இடங்களையும் சிறுவர்கள் பார்க்கவேண்டும். பார்த்து நமது நாட்டின் பழைய பெருமைகளை அறிந்து மகிழவேண்டும்.

சிறுவர்களே! நீங்கள் செஞ்சிக்கோட்டையைப் பார்க்க உங்கள் பள்ளிக்கூடத்து ஆசிரியர்களுடன் செல்லுங்கள்.

அருஞ்சொற் பொருள் : எதிரிகள் = பகைவர்கள், கிரி = மலை, கடினம் = கஷ்டம், சிதைந்து = அழிந்து.

## வினாக்கள்

1. செஞ்சிக்கோட்டை எங்கே இருக்கிறது ?
2. செஞ்சி மலையடிவாரத்தில் உள்ள கட்டிடங்கள் எவை ?
3, செஞ்சிக்கோட்டை பகைவர் எளிதில் நுழைய முடியாதபடி எவ்வாறு அமைக்கப் பட்டுள்ளது ?
4. கிருஷ்ணகிரியின் மீதுள்ள கட்டிடங்கள் எவை ?
5. செஞ்சிக் கருகிலுள்ள ஊர் எது ? அதன் சிறப்பு என்ன ?

## பயிற்சிகள்

1. சிதைந்து என்பது கிடக்கிறது என்னும் வினைச் சொல்லைக்கொண்டு முடிவதனால் அது வினை யெச்சமாகும். சிதைந்த என்பது கோட்டை என்னும் பெயர்ச்சொல்லைக் கொண்டு முடி வதனால் அது பெயரெச்ச மெனப்படும். இது போல் உள்ள மும்மூன்று பெயரெச்ச வினை யெச்சங்களை எழுது.
2. செஞ்சியைப் பார்க்க உன் நண்பனை அழைப் பதுபோல் ஒரு கடிதம் எழுது.
3. சரித்திரப் புகழ், அந்நகரம், ஓராலயம்—பிரித்து எழுது.



## 9. கப்பலோட்டிய தமிழர்

நம் நாடு சுதந்தரம் இன்றி ஆங்கிலே யருக்கு அடிமை நாடாக இருந்த பொழுது பல பெரியோர்கள் நாடு விடுதலை யடைய வீரப்போர் புரிந்தனர். அவர்களில் மகாத்மா காந்தி அடிகள், திலகர், பாரதியார், சிதம் பரனுர் போன்ருேர் சிறப்புற்றவர் ஆவார்கள்.

நம் தமிழ் நாட்டுப் பாண்டிய நாட்டின் கண் உள்ளது திருநெல்வேலி மாவட்டம். அதில் கட்டபொம்மனைப் பெற்ற பாஞ்சாலங் குறிச்சி என்னும் பதிக்குப் பக்கத்திலே தென் அளகை என வழங்கப்பட்ட ஒட்டப்பிடாரம் என்னும் சிற்றூர் உள்ளது. அவ்வூரிலே வழக்கறிஞரான உலகநாதப்பிள்ளை என்ப வர் வாழ்ந்து வந்தார். அவருடைய மைந்தர் சிதம்பரனுர் ஆவர். அவர் 1872-ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 5-ஆம் நாள் தோன்றினுர்.

ஆருவது வயதில் அவரை ஒரு பள்ளியில் சேர்ப்பித்தனர். அவர் அங்கே முறைப்படி கற்க வேண்டிய அரிச்சுவடி, ஆத்திச்சூடி, உலகநீதி முதலிய சிறு நூல்களை முழுவதும் கற்றுத் தேர்ந்தார். அப்பால் ஆங்கிலமும் பயின்ருர். பல்லாண்டுகள் படித்த பிறகு

அவர் வழக்கறிஞர் தேர்வில் வெற்றி பெற்று வழக்கறிஞர் ஆனார்.

அவர் எப்பொழுதும் நியாயமான வழக்கு களில்தான் வழக்காடப் போவார். ஏழை களுக்குப் பணமின்றியே வாதாடுவார். அத னால் ஏழைகள் அவரைப் போற்றினர். அவ ரிடம் பணமும் நிறைந்தது.

அந்நாளில் ஆங்கிலச் சீமைத் துணிகளே இங்கு கட்டப்பட்டு வந்தன. அதனால் நமது நாட்டுக் குடிசைத் தொழிலான நெசவுத் தொழில் மறையத் தொடங்கிற்று. அந்நிலை யில் சிதம்பரனார் சுதேசியப் பண்டகசாலை ஒன்றை நிறுவினார்.

கடலிலே கலம் செலுத்தித் திரவியம் தேடி யவன் தமிழன். ஆங்கிலேயர் ஆட்சியிலே தமிழன் கலம் ஓட்டுதலையே மறந்தான். அவ்வமயம் கப்பல் கம்பெனி நடத்தியவர்கள் எல்லாம் வெள்ளையரே. நம் நாட்டவரை அவர்கள் மதிக்கவில்லை. எனவே, நம் வியா பாரிகள் பெருத்த அளவிலே நஷ்டம் அடைந் தனர். இதைக்கண்டு மனம் கொதித்த வீர சிதம்பரனார் சுதேசிக் கப்பல் இயக்கம் ஆரம் பித்தார். சிற்றரசரும், செல்வரும் சிதம்பரனா ருக்கு உதவி செய்தனர்.

அவர் அத்தகைய சுதேசிக் கப்பல் இயக்கம் ஒன்று நடத்துவதை அறிந்த பொருமைக்காரர்கள் ஆங்கிலேய ஆட்சியாளரிடம் முறையிட்டனர். அவர்கள் சிதம்பரனாரைக் கைது செய்ய எண்ணினர்; சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர். விபின சந்திர பாலர் என்ற பெரியார் அவர்களின் நினைவு நாளில் தடையுத்தரவை மீறிப் பொதுக் கூட்டம் போட்டுப் பேசியதாக வீர சிதம்பரனாரும், சுப்பிரமணிய சிவா என்பவரும், மற்ற சிலரும் கைது செய்யப்பட்டனர்.

அவர்கள் சிறை சென்றதைக் கண்ட மக்கள் கிளர்ச்சி செய்தனர். அதனால் அவ்விருவரும் விடுதலை செய்யப்பட்டனர். மீண்டும் சில நாட்களில் அவர்கள்மீது அரச நிந்தனைக் குற்றம் சாட்டிக் கைது செய்தனர்.

சிதம்பரம் பிள்ளையின் ஒருயிர்க்கு இரு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது. சிவாவுக்குப் பத்து ஆண்டுகள் கடுங்காவல் தண்டனை அளிக்கப்பட்டது. உயர்நீதி மன்றத்தில் 'அப்பீல்' செய்துகொண்ட பிறகு சிறைத்தண்டனை ஆருண்டுகளாகக் குறைந்தது. சிறையில் சிதம்பரனார் செக்கு இழுத்தார்; கல் உடைத்தார்; கூழ் குடித்தா

ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு அவர் வெளி வந்தார். கோவில்பட்டியில் முன்போலவே வழக்கறிஞராய் விளங்கினர்.

சிதம்பரம் பிள்ளை சிறந்த தமிழ்ப் புலவர்; சிறந்த கவிஞர். அவர் சில தமிழ் நூல்களைப் பதிப்பித்துள்ளார். அவர் பாடிய பாடல்கள் ஒரு நூலாக வெளிவந்திருக்கின்றன. வேறு சில நூல்களும் எழுதியுள்ளார்.

சிதம்பரம் பிள்ளை ஒரு விடுதலை வீரர்; அவர் நாட்டுக்குத் தொண்டு செய்து சிறை சென்றவர். அவர் இறந்து 17 ஆண்டுகள் ஆகின்றன. என்றும் அவர் பெருமை மங்காது.

இப்பொழுது அவர் பெயரால் தூத்துக் குடிக்கும் இலங்கைக்கும் ஒரு கப்பல் பெரு மிதத்துடன் இந்தியக்கொடி பறக்கச் சென்று கொண்டு வருகிறது. சிதம்பரம் பிள்ளையின் எண்ணம் பலித்தது. ஆனல் அதைக் கண்டு களிப்பதற்கு அவர் இல்லை. ஆயினும் அவர் புகழ் உடல் அதைக் கண்டு மகிழ்கிறது. அப் பெரு வீரரைத் தமிழர்கள் மறவாது வாழ்த்து வார்களாக.

அருஞ்சொற் பொருள் : சுதந்தரம்=உரிமை, காலம் = கப்பல், அலுவல் = வேலை, பெருமிதம் = பெருமை, மங்காது=குறையாது.

## வினாக்கள்

1. சிதம்பரம் பிள்ளை பிறந்த ஊர், தந்தை பெயர் என்ன ?
2. சிதம்பரனார் கப்பல் ஓட்ட எண்ணியது ஏன் ?
3. சிதம்பரனார் ஏன் கைது செய்யப்பட்டார் ?
4. சிதம்பரம் பிள்ளைக்கு என்ன தண்டனை வழங்கப் பட்டது ?
5. சிதம்பரம் பிள்ளையின் பெருமைகளைப் பதினைந்து வரியில் எழுது.

## பயிற்சிகள்

1. 'அவர் கப்பல் கம்பெனி ஒன்று ஆரம்பித்தார்'— இவ்வாக்கியத்தில் உள்ள எழுவாய் பயனிலை செயப்படு பொருள்களை எழுது.

2. பொருத்தி எழுது :—

| | |
|---|---|
| சிதம்பரனார் | ஒரு தேசியக் கவிஞர். |
| பாரதியார் | சிதம்பரனாருடன் சிறை சென்றார். |
| காந்தி அடிகள் | கப்பல் ஓட்டினர். |
| சுப்பரமணிய சிவா | உலகம் போற்றும் உத்தமர். |



# 10. மருத்துவ நிலையம்

நமக்கு ஏற்படும் நோய்களையும், காயங்களையும் தீர்ப்பதற்கு மருத்துவ நிலையம் உதவி செய்கிறது. அங்கே நோய்களைக் கண்டறிவதற்குத் தகுதிபெற்ற மருத்துவர் இருப்பார். அவருக்கு உதவியாக இருந்து மருந்துகளைத் தயாரித்துக் கொடுப்பதற்குச் சிலர் இருப்பர். அவருக்குக் 'கம்பவுண்டர்' என்று பெயர்.



நோயாளியை முதலில் மருத்துவர் சோதிப்பார்: அவரவர் உடல் நிலைக்கு ஏற்றவாறு மருந்துகளை அவர் எழுதித்தருவர். நோயாளி மருந்தைப் பெற கம்பவுண்டரிடம் செல்வார்.

அவர் மருத்துவர் குறித்த மருந்துகளைத் தயாரித்து நோயாளிகளுக்குக் கொடுப்பார்.

மருத்துவர் நோயாளிகளைப் பரிசோதிக்க உதவும் கருவிக்கு 'ஸ்டெதஸ்கோப்பு' என்று பெயர். மருத்துவர் காயம் பட்டவர்களுக்கு 'டிங்ச்சர்' முதலியவை போட்டுக் கட்டுக் கட்டி அனுப்புவார்.



பெரிய பெரிய மருத்துவ நிலையங்களில் கடுமையான நோய் உள்ள மக்கள், சிறிது காலம் தங்கி வைத்தியம் செய்துகொள்வார்கள். அங்கே அவர்களைக் கவனிப்பதற்கு மருத்துவப் பணியாளர் (நர்ஸ்) உள்

ளனர். அவர்கள் காலம் அறிந்து நோயாளி களுக்கு மருந்தும், உணவும் கொடுப்பர். அவ்வப்போது அந் நோயாளிகளின் உடல் நிலையை அறிந்து சுவரில் மாட்டப்பட்டுள்ள அட்டையில் குறித்து வைப்பார்கள். மருத்து வர் அதைப்பார்த்து அதன் மூலம் நோயாளி யின் உடல் நிலையை அறிந்து அதற்கு ஏற்ற வாறு மருந்தைக் கொடுப்பர்.

நமக்கு நோய் அதிகமாய் இருந்தால் நாம் உடனே மருத்துவரிடம் சென்று காட்ட வேண்டும். அவர் நமக்கு மருந்து கொடுப் பார். சில நோய்களுக்கு ஊசியின் மூலமாக மருந்தை உடலுக்குட் செலுத்துவார். சில நோய்களுக்கு 'ஆபரேஷன்' செய்தும் குணப் படுத்துவார்.

மருத்துவச்சாலை இல்லாத கிராமங்களில் உள்ள மக்களுக்கு வைத்தியம் செய்வதற்கு ஒரு புதிய முறையை ஏற்படுத்தி உள்ளார்கள். ஒரு பெரிய மோட்டார் வண்டியில் மருந்து வகைகளை வைத்துக்கொண்டு மருத்துவர் களும், மருந்து கொடுப்பவர்களும் செல்வார் கள். சென்று, ஊருக்குப் பொதுவான ஓரிடத் தில் இருந்து நோயுற்ற மக்களுக்குச் சிகிச்சை செய்து மருந்து கொடுப்பார்கள். இதை 'நட

மாடும் மருத்துவச் சாலை' என்று சொல்லலாம். ஒரே நாளில் பல கிராமங்களுக்கு இதன் மூலம் வைத்தியம் செய்யலாம்.

எதிர்பாராத ஆபத்துக்கு ஆளாகி அடிபட்டவர்களையும், எழுந்து நடக்கும் சக்தி இல்லாத நோயாளிகளையும் மருத்துவச் சாலைக்கு அழைத்துச் செல்வதற்கு 'ஆம்புலன்ஸ்' வண்டி அரசாங்கத்தாரால் ஏற்படுத்தப்பட்டுள்ளது. குறைந்த கட்டணத்தில் சௌகரியமான முறையில் நோயாளிகளை அழைத்துக்கொண்டு செல்வதற்கு இப்படிப்பட்ட ஆம்புலன்ஸ் வண்டிகள் மிகவும் பயன் உள்ளவைகளாக இருக்கின்றன.

ஒவ்வொரு கிராமத்திற்கும் மருத்துவச் சாலை ஏற்படவேண்டும். பெரிய நகரங்களில் பலவிதமான நோய்களுக்கும் சிகிச்சை செய்யக்கூடிய பல மருத்துவச்சாலைகள் உள்ளன. மக்களுக்கு மிகவும் அவசியமான மருத்துவச் சாலைகள் ஒவ்வொரு ஊரிலும் ஏற்பட்டு நோயற்ற வாழ்வை மக்கள் பெறுமாறு அரசாங்கமும் செல்வர்களும் செய்யவேண்டும்.

"நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்"

---

அருஞ்சொற் பொருள்: சிகிச்சை = வைத்தியம், ஆபரேஷன் = இரணசிகிச்சை, சோதிப்பார் = பரிசோதனை செய்வார், மருத்துவர் = டாக்டர்.

## வினுக்கள்

1. நோய் உள்ள ஒருவன் என்ன செய்யவேண்டும்?
2. 'கம்பவுண்டர்' — யார்?
3. கிராம மக்களுக்கு வைத்தியம் செய்வதற்கு ஏற்பட்டுள்ள புதிய முறை என்ன?
4. ஆம்புலன்ஸ் வண்டிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளதன் நோக்கம் என்ன?
5. நோய் மிகுந்தவர்கள் என்ன செய்ய வேண்டும்?

## பயிற்சிகள்

1. மருத்துவர் நமக்கு மருந்து கொடுப்பார் — எழுவாய் பயனிலை செயப்படுபொருள்களை எழுது.
2. கொடுப்பர் — என்ன கால வினைமுற்று?
3. செல்வார் என்ற எதிர்கால வினைமுற்றை இறந்தகால வினைமுற்ருகவும், நிகழ்கால வினைமுற்ருகவும் மாற்றி எழுது.
4. ஆருண்டு, தடையுத்தரவு, குறைவற்ற, வழக்கறிஞர் — பிரித்தெழுது.



# 11. தமிழன் மேன்மை

தமிழன் என்றொரு இனமுண்டு
 தனியே அதற்கொரு குணமுண்டு
அமிழ்தம் அவனுடை மொழியாகும்
 அன்பே அவனுடை விழியாகும். (1)

அறிவின் கடலைக் கடந்தவனும்
 அமிர்தம் திருக்குறள் அடைந்தவனும்
பொறியின் ஆசையைக் குறைத்திடவே
 பொருந்திய நூல்கள் உரைத்திடுவான். (2)

கலைகள் யாவினும் வல்லவனும்
 கற்றவர் எவர்க்கும் நல்லவனும்;
நிலைகொள் பற்பல அடையாளம்
 நின்றன இன்றும் உடையோனும். (3)

சிற்பம் சித்திரம் சங்கீதம்
 சிறந்தவர் அவனினும் எங்கேசொல்!
வெற்பின் கருங்கல் களிமண்போல்
 வேலைத் திறத்தால் ஒளிபண்ணும். (4)

மானம் பெரிதென மதித்திடுவான்
 மற்றவர்க் காகத் துயர்ப்படுவான்
தானம் வாங்கிடக் கூசிடுவான்
 தருவது மேல்எனப் பேசிடுவான். (5)

உத்தமன் காந்தியின் அருமைகளை
 உணர்ந்தவன் தமிழன் பெருமையுடன்
சத்தியப் போரில் கடனறிந்தான்
 சாந்தம் தவறா துடனிருந்தான். (6)

— நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை.

அருஞ்சொற் பொருள் : இனம் = கூட்டம், விழி = கண், பொறி = மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து இந்திரியங்கள், வெற்பு= மலை, கூசிடுவான் =வெட்கப்படுவான், கடன் = கடமை.

## வினாக்கள்

1. தமிழ்மொழி எப்படிப்பட்டது ?
2. தமிழரின் சிறந்த குணங்கள் எவை ?
3. தமிழன் எதைப் பெரிதாக மதிப்பான் ?
4. தமிழன் எதற்குக் கூசிடுவான் ?
5. காந்தியின் அருமைகளை அறிந்த தமிழன் என்ன செய்தான் ?

## பயிற்சிகள்

1. பிரித்து எழுது :—என்றெரு, பெரிதென, கடனறிந்தான்.
2. 'தமிழன் மேன்மை' என்பதைப் பற்றிப் பத்து வரியில் ஒரு கட்டுரை எழுது.
3. மதித்திடுவான், கூசிடுவான், உணர்ந்தவன் — இவற்றைச் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.
4. 'தமிழன் மானத்தையே உயிரினும் சிறந்ததாக மதிப்பான்' — இத்தொடரிலுள்ள எழுவாய் பயனிலை செயப்படுபொருள்களை எழுது.

# 12. நமது உணவு

நமது உடல் நன்றாக வளர்வதற்கும், உடலின் உறுப்புக்கள் பலவும் நன்றாக வேலை செய்வதற்கும் சக்தி வேண்டும். அச் சக்தியை நாம் உணவிலிருந்தே பெறுகிறோம். ஒருவேளை உணவு உண்ணாமல் நம்மால் இருக்கமுடியாது. உணவு இல்லையானால், உடல் வேலை செய்யும் சக்தியை இழந்து சோர்வு அடையும். ஆதலால் நமக்கு உணவு அவசியம் என்பது தெரிகிறது.

நாம் உண்ணும் உணவில் பலவித சத்துப் பொருள்கள் இருக்கின்றன. நாம் பல சத்துக்கள் பொருந்திய பல உணவுப் பொருள்களையும் கலந்தே உண்ண வேண்டும். ஏனெனில், அப்பொழுதுதான் நமது உடல் வளர்ச்சி, சக்தி ஆகிய இரண்டையும் பெறும். நாம் வெறும் சோற்றையே சாப்பிட்டு வந்தால் மாவுப் பொருள் மட்டுமே அதில் மிகுந்து இருக்கும். ஆதலால் நம் உடலுக்கு வேண்டிய சக்தி, வளர்ச்சி ஆகியவைகளை நாம் பெறமுடியாது. அன்றியும் சில ஜீரண உறுப்புக்களுக்கு மட்டும் வேலை அதிகரித்து உடல் நலம் கெடும்.

நாம் நமது உணவில் பழவகைகளையும், காய்கறி, கீரைவகைகளையும், பால், தயிர், மோர், நெய் முதலியவற்றையும் மிகுதியாகச் சேர்த்துக்கொள்ள வேண்டும். மேலும் நாம் உண்ணும் உணவானது சுத்தமானதாகவும், சத்து நிறைந்ததாகவும் இருக்க வேண்டும்.



நம் உணவில் உயிர்ச்சத்துப் பொருள்கள் (வைடமின்கள்) அவசியம் இருக்க வேண்டும். சத்துப் பொருள்களுக்கு ஏ. பி. சி. டி. வைடமின்கள் என்று ஆங்கிலத்தில் பெயர் வைத்திருக்கிறார்கள். இவை ஒவ்வொன்றும் தேவையான அளவு நமது உடலில் இல்லாவிட்டால் உடல் வளர்ச்சி குன்றும்; கண்நோய், மலச்சிக்கல், சொறி, பல்நோய் முதலான பல வியாதிகள் உண்டாகும். ஆதலால் நாம் உணவில் சத்துள்ள பொருள்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

நாம் நமது உடலில் எந்த உயிர்ச்சத்து குறைந்திருக்கிறதோ அது உள்ள பொருளை அதிகமாக உண்டு குறைவை ஈடுபடுத்திக் கொள்ளவேண்டும். தேக வளர்ச்சிக்கும் ஆரோக்கியத்திற்கும் உயிர்ச்சத்துப் பொருள் கள் அவசியம். குறைந்த அளவு உணவை உட்கொள்ளுவதாலும், சத்தற்ற உணவை உட்கொள்ளுவதாலும், அளவுக்கு மீறி ஜீரண உறுப்புக்களுக்கு வேலை தருவதாலும், ஆகாரத்தை மெல்லாமல் விழுங்குவதாலும் ஜீரண உறுப்புக்கள் கெட்டு உடல் நலம் கெடும்.

தினமும் நாம் பால் குடிப்பது நல்லது. ஏனெனில் அதில் ஆறுவகைச்சத்துப்பொருள் களும் அடங்கியுள்ளன. பால் எளிதில் ஜீரணம் ஆகும். பெரியவர்கள், சிறியவர்கள், குழந்தைகள் ஆகிய அனைவரும் பால் குடிக்க லாம். சிறு குழந்தைகளுக்கு ஏற்ற நல்லுணவு நல்ல பசும்பாலேயாகும். பாலை ஒரு பூரண உணவு என்றே கூறலாம்.

நாம் உணவை ஒவ்வொரு நாளும் குறித்த காலத்தில்தான் உண்ணவேண்டும். நினைத்த நேரத்தில் சாப்பிடக்கூடாது. 'காலம் அறிந்து உண்' என்பதை இளைஞர்கள் மறக்கக்

கூடாது. உணவை நாம் நன்ருகப் பக்குவப்படுத்தி உண்ண வேண்டும். அழுகிய காய்கறிகள், கீரைகள், பழங்கள் முதலியவற்றையும், நன்ருக வேகாத பண்டங்களையும், உண்ணக்கூடாது. அப்படி உண்டால் நோய் உண்டாகும்,

பல நோய்களுக்கும் காரணமாக இருக்கும் ஈ, கொசு மொய்க்கும் பண்டங்களையும், அசுத்தமான இடங்களிலும், சாக்கடை ஓரங்களிலும் விற்கும் தின்பண்டங்களையும் உண்ணக்கூடாது.

நாம் உடல் நலத்துடன் இருக்கவேண்டுமானல் மேற்சொன்ன விதிகளை அனுசரித்து நடக்கவேண்டும்.

உணவைப் பற்றி வழங்கும் பழமொழிகள் பல உண்டு. அவற்றுள் சிலவற்றைச் சிறுவர்கள் மறவாமல் நினைவில் வைத்து அவ்வாறு நடத்தல் வேண்டும்.

'பசிக்கப் புசி'

'கூழானலும் குளித்துக்குடி'

'அளவறிந்து உண்'

'மீதூண் விரும்பேல்'



அருஞ்சொற் பொருள்: சோர்வு = களைப்பு, குன்றும் = குறையும், ஈடுபடுத்தல் = சரிப்படுத்தல்.

## வினாக்கள்

1. நமக்கு உணவு ஏன் அவசியமாகும்?
2. நம் உணவில் பலவிதப் பொருள்களையும் சேர்த்துக்கொள்வது ஏன்?
3. 'வைடமின்' என்றால் என்ன?
4. உயிர்ச்சத்துப் பொருள்கள் குறைந்தால் உண்டாகும் நோய்கள் எவை?
5. உணவு உண்பதைப்பற்றிக் கவனிக்க வேண்டிய விதிகள் எவை?

## பயிற்சிகள்

1. பொருத்தி எழுது :—

| | |
|---|---|
| நாம் | வலிவுபெறும் |
| உறுப்புக்கள் | நல்ல உணவு |
| நீங்கள் | உண்கிறோம் |
| பால் | நடக்க வேண்டும் |

2. கோடிட்டவற்றைப் பூர்த்தி செய் :—

நீங்கள் ______ படிக்கிறீர்கள்.

நாங்கள் ______ ______

அவர்கள் ______ ______



## 13. தாமஸ் ஆல்வா எடிசன்

சிறுவர்களே, நீங்கள் கிராமபோன்பார்த் திருப்பீர்கள் ; படக்காட்சி பார்த்திருப்பீர்கள். ஆம், கிராமபோன் கேட்காத வீடு கிடையாது. படக்காட்சி பார்க்காத மனிதர் இலர். இவற்றைக் கண்டுபிடித்தவர் யார் ? எந்த நாட்டவர் ? எப்படிக் கண்டுபிடித்தார் ? அவர் வாழ்க்கை வரலாறு என்ன ? இவற்றைத் தெரிந்துகொள்ள உங்களுக்கு ஆவல் உண்டாகிறது அல்லவா ?

அவைகளைக் கண்டுபிடித்தவர் தாமஸ் ஆல்வா எடிசன் என்பவர். அவர் அமெரிக்காவில் உள்ள மிலான் நகரத்தில் 1847–ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 11–ஆம் நாள் பிறந்தார்.

எடிசன் ஒரு சமயம் ஒரு கோழி முட்டையின்மீது உட்கார்ந்துகொண் டிருந்தார். அதைக்கண்ட அவர் தந்தையார் 'இது என்ன செய்கை ?' என்றார். அதற்கு எடிசன் 'குஞ்சு பொரிக்கிறேன்' என்று விடையளித்தாராம். 'அது உன்னால் முடியாதே' என்றாராம் தந்தை. 'ஒரு கோழியால் முடியும்போது என்னால் ஏன் முடியாது ?' என்றாராம் சிறுவர்.

எடிசன், பள்ளிக்கூடத்தில் படிக்கும் போது பதில் அளிக்கமுடியாத பல கேள்வி களைக் கேட்டுக்கொண்டு இருப்பதைக் கண் டோர், எடிசனை 'மக்கு' என்றனர். ஒரு சம யம் அப்பள்ளிக்கு வந்த கல்வியதிகாரி எடி



சனின் கேள்விகளைக்கண்டு 'எடிசனின் மூளை குழப்பமாயிருப்பதால் இவனைப் பள்ளியில் வைத்திருப்பதில் பயனில்லை' என்றாராம். அதனால், எடிசன் தன் தாயாரிடம் சென்று, ''நான் பள்ளிக்குப் போகமுடியாது,'' என்று

ராம். அவர் தாயும் ஒரு ஆசிரியை, ஆதலால் அவ்வம்மையே எடிசனைப் பள்ளிக்கு அழைத்துச் சென்று தானே கற்பித்தாராம். இரசாயனம், பௌதிகம், விஞ்ஞானம் போன்றவைகளைப் படிப்பதில் எடிசன் ஆர்வம் கொண்டார்.

பிறகு, எடிசன் இரயில் வண்டியில் 'தினத்தாள்' விற்கும் எளிய வேலையில் இருந்தார். அப்பொழுதுதான் எடிசன் தந்தியின் அவசியத்தை உணர்ந்தார். வண்டியில் அச்சு இயந்திரத்தை வைத்து, தாமே தினத்தாள் வெளியிடுபவராக ஆனார். எடிசன் முதன் முதலில் ஒரு தந்திச் சாலையில் சம்பளத்திற்கு வேலை செய்தார். பிறகு, வேலையைவிட்டு நீங்கி 'நியூயார்க்' நகரம் சென்றார். அங்கே இருந்த பொன் வியாபார நிலையத்தில் தந்திக் கருவி வேலை செய்யாமல் நின்றுவிட்டது. அதை எடிசன் செம்மைப்படுத்தினார். அவருடைய திறமையைக் கண்ட அந்நிலையத் தலைவர் எடிசனுக்கு மாதம் 300 ரூபாய் சம்பளம் உள்ள மானேஜர் பதவியைக் கொடுத்தார்.

அதன் பிறகு எடிசன், தங்கத்தின் விலையை அச்சடிக்கும் புதிய கருவியைக் கண்டு

பிடித்தார். ஓராண்டு அவரே அதை நடத்தி வந்தார். அதன் மூலம் எடிசனுக்கு அளவற்ற பணமும் புகழும் கிடைத்தது.

அவர், தமக்குக் கிடைத்த பொருளைக் கொண்டு 'நிவார்க்' என்னும் இடத்தில் தொழிற்சாலை ஒன்று ஏற்படுத்தினர். எடிசன் தந்தியில் பல சீர்திருத்தங்களைச் செய்தார். பிறகு எடிசன், கிராமபோனைக் கண்டுபிடித்தார். தொலை பேசியில் (டெலிபோன்) பல சீர்திருத்தங்களைச் செய்தார்.

பிறகு, அவர் ஸர் ஹம்ப்ரி டேவி என்னும் விஞ்ஞானி கண்டுபிடித்த நீண்டநேரம் எரியாத மின் விளக்கை நீண்டநேரம் எரியச் செய்தார். பிறகு அசையும் பொருள்களின் பல நிலைகளை விளக்கிக் காட்டுகின்ற படங்களை விநாடிக்கு 15 படம் வீதம் பிடித்து, அவற்றை விரைந்து நகரும்படிச் செய்தார். அதனல் அப்பொருள் அசைவதுபோலத் தோன்றியது. அவருடைய தொழிற்சாலையில் திரையில் படங்களைக் காட்ட 'ஸ்டூடியோ' ஒன்று அமைத்தார்.

நாமும் எடிசனைப் போல் பல புதுமைகளைக் கண்டுபிடித்துப் புகழ்பெற வேண்டும்.

---

அருஞ்சொற் பொருள்: அன்றாடம் = தினந்தோறும், மின்விளக்கு = மின்சார விளக்கு (பல்பு).

## வினாக்கள்

1. எடிசன் எங்கே, எப்பொழுது பிறந்தார்?
2. எடிசன் கண்டுபிடித்தவற்றுள் சிலவற்றை எழுது.
3. எடிசன் இளமையிலேயே ஆராய்ச்சி அறிவு அமையப்பெற்றார் என்பதை ஓர் உதாரணத்தால் விளக்கு.
4. எடிசன் என்ன வேலையில் இருந்து எப்படி உயர்வு பெற்றார்?

## பயிற்சிகள்

1. பொருத்தி எழுது.

| | |
|---|---|
| நான் | வந்தார்கள் |
| நாங்கள் | சொன்னான் |
| நீ | செய்தேன் |
| நீங்கள் | போனோம் |
| அவன் | பாடினாய் |
| அவர்கள் | கேட்டீர்கள். |

2. இப்பாடத்திலிருந்து மூன்று பெயரெச்சங்களையும் மூன்று வினையெச்சங்களையும் எடுத்து எழுது.
3. இப்பாடத்திலிருந்து பொருள், இடம், தொழிற் பெயர்களுக்கு இரண்டிரண்டு உதாரணங்கள் எழுது.

## 14. அன்புள்ள மன்னன்

(மௌனப் படிப்பு)

ஆஸ்திரியா தேசத்தில் ஹென்ரி என்னும் ஓர் அரசன் சில நூற்றாண்டுகளுக்கு முன் ஆண்டு வந்தான். அவன் மிகவும் நல்லவன்; தனது நாட்டு மக்களிடத்தில் மிகுந்த அன்புடையவன்; குடிமக்களுக்கு ஒரு குறையும் ஏற்படக் கூடாது என்ற நல்ல எண்ணம் உடையவன்; குடிகளுடைய குறைகளை நேராகவே விசாரித்து அவற்றைத் தீர்க்கும் தன்மை வாய்ந்தவன்.

ஒரு நாள் அம்மன்னன் வழக்கம்போல் மாறுவேடம் தரித்துக்கொண்டு நகரைச் சுற்றி வந்தான். அப்போது ஒரு தெருக்கோடியிலே சிறுவன் ஒருவன் அழுதுகொண் டிருந்தான். அச்சிறுவனை அரசன் பார்த்தான். அவன் அருகில் சென்று "நீ யார்? ஏன் அழுதுகொண்டிருக்கிறாய்? உனக்கு என்ன வேண்டும்?" என்று வினவினான்.

அவ்வார்த்தைகளைக் கேட்ட சிறுவன் அழுகையை நிறுத்தித் தன்னிடம் அன்பாகப் பேசிய அவரை உற்றுக் கவனித்தான். தன்னிடம் பேசியவர் அந்த நாட்டு அரசர் என்று அவனுக்குத் தெரியாது. இரக்கமுள்ள

பெரியார் இவர் என்று எண்ணிக்கொண்டு அவர் கேட்ட கேள்விகளுக்குப் பின்வருமாறு பதில் கூறினான்.



"அன்புள்ள ஐயா, நான் ஒரு பிச்சைக் காரச் சிறுவன் அல்ல. என்னுடைய தந்தை ஒரு பெரிய போர் வீரராக இருந்தார். சில நாட்களுக்கு முன் நடந்த சண்டையில் அவர் இறந்துவிட்டார். இப்பொழுது எங்கள் குடும் பம் காப்பாற்றுவாரில்லாமல் துன்பப் படு

கிறது. என்னுடைய தாயார் பத்து நாட்களாக நோயால் உடல் மெலிந்து படுக்கையிலேயே படுத்துக்கொண் டிருக்கிருர்கள். நானும் என் அண்ணனும் பாடுபட்டுத் தாயாரைக் காப் பாற்றிக்கொண்டு வருகிறேம். இன்று என் தாயாரின் நிலே மிகவும் கவலேக்கிடமாக இருக்கிறது. மருத்துவரை அழைத்துக் கொண்டு செல்ல வந்தேன். மருத்துவருக் குப் பணம் கொடுக்க வேண்டுமே! என்ன செய்வது என்ற ஏக்கத்திஞல் என்னேயும் அறியாமல் அழுதுகொண் டிருக்கிறேன்'' என்று மிக வருத்தமாகக் கூறிஞன்.

சிறுவன் கூறிய உருக்கமான வார்த்தை களேக் கேட்ட மன்னன் மனம் இளகி, ''தம்பி, நீ கவலேப்படாதே! நீ போய் மருத்துவரை அழைத்துக்கொண்டு வா. அந்த மருத்து வருக்கு நான் பணம் கொடுக்கிறேன்.'' என்று சொல்லிச் சிறுவனே அனுப்பி விட் டான்: பிறகு அரசன் அவனுடைய வீடு இருக்குமிடத்தை அறிந்துகொண்டு அங்கே சென்ருன்.

ஒரு சிறிய வீட்டிலே ஒரு கட்டிலின்மீது அச்சிறுவனின் தாயார் படுத்துக்கொண் டிருந்தார். மெலிந்த உடலுடன் இருந்த

அவ்வம்மையாரைப் பார்த்த மன்னன் சிறுவன் கூறியவை எல்லாம் உண்மை என்று தெரிந்துகொண்டான். அவ்வம்மையாரைப் பார்த்து, நோயின் தன்மையையும் அதன் காரணத்தையும் தெரிந்துகொண்டு, ''அம்மா, கவலைப்படாதீர்கள், உங்களுக்கு நான் மருந்து தருகிறேன். அதைச் சாப்பிடுங்கள். விரைவில் உங்கள் உடல் குணம் அடையும்'' என்று கூறினன்.



அந்த அம்மையாரின் அருகிலே சிறுவனுடைய அண்ணன் இருந்தான். அவனிடம் அரசன் ஒரு கடிதத்தில் ஏதோ சில எழுதி ''இக் கடிதத்தில் உங்களுக்கு வேண்டிய

மருந்தை எழுதிக் கொடுத்திருக்கிறேன். பெற்றுக் கொள்ளுங்கள்,'' என்று சொல்லி விட்டுப் போய்விட்டான்.

தங்கள் வீட்டிற்கு வந்தவர் அந்நாட்டு மன்னன் என்பது அவர்களுக்குத் தெரியாது. சிறிது நேரத்திற்குள் சிறுவன் ஒரு மருத்து வரை அழைத்துக்கொண்டு வந்தான். ''அம்மா, மருத்துவரை அழைத்துக்கொண்டு வந்துவிட்டேன். இவரிடம் கையைக் காட் டுங்கள்'' என்று கூறினன். தாயாருக்கு ஒன்றும் புரியவில்லை. இப்பொழுதுதான் ஒரு மருத்துவர் வந்து சென்ருர். வேறு ஒரு மருத்துவரும், வந்துவிட்டாரே! என்ற ஆச் சரியத்தோடு, ''இப்பொழுதுதானே ஒருவர் வந்து மருந்து எழுதிக் கொடுத்துவிட்டுச் சென்ருர்'' என்று கூறினுள். அவ்வார்த்தை யைக் கேட்ட சிறுவன் ஆச்சரியம் அடைந்து அவர் எழுதிக்கொடுத்த மருந்துச் சீட்டைத் தான் அழைத்து வந்த மருத்துவரிடம் காட்டினன்.

அவர் அச்சீட்டைப் படித்துப் பார்த்து ''அம்மா, இப்பொழுது உங்களை வந்து பார்த் துச் சென்றவர் இந்த நாட்டு அரசர். உங்க ளுக்கு இருநூற்று ஐம்பது ரூபாய் கொடுக்கு

மாறு அதிகாரிகளுக்குக் கட்டளையிட்டு இக் கடிதத்தில் எழுதியுள்ளார். நீங்கள் அந்தப் பணத்தை வாங்கிக்கொண்டு சுகமாக வாழலாம். இனி உங்களுக்கு ஒரு கவலையும் வேண்டாம். அரசரே உங்களைக் காப்பாற்று வார். உங்கள் பிள்ளைகளும் இன்பமாக வாழ லாம். நம் அரசர் வாழ்க" என்று வாழ்த்தி விட்டுச் சென்றார்.

சிறுவன் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. தன்னிடம் பேசியவர் அரசர் என்று அவனுக்கு அப்போதுதான் தெரிந்தது. நடந்த வற்றைத் தாயாரிடம் தெரிவித்தான். தாயும் தனயனும் நற்குணம் மிக்க மன்னனைப் "பல் லாண்டு வாழ்க" என்று வாழ்த்தினர். அச்சிறு வர்கள் பெரியவர்கள் ஆகும் வரைக்கும் அந் நாட்டு மன்னனால் ஆதரிக்கப்பட்டார்கள். அவர்கள் அறிவுத் திறமையும், உடல்வன்மை யும் பெற்றுப் போர் வீரர்கள் ஆகி நாட்டுக் குச் சேவை செய்து நல்ல புகழ் பெற்றார்கள். இச் செய்தியை அறிந்த மக்கள் அம் மன்ன னின் அன்பைப் பாராட்டினர். அன்புள்ள மன்னன் ஹென்ரியின் புகழ் அவனி முழுவ தும் பரவியது. அன்பு வளர்க.

---

அருஞ்சொற் பொருள் : இரக்கம் = கருணை, ஏக்கம் = கவலை, தனயர் = பிள்ளைகள், அவனி = உலகம்.

## வினாக்கள்

1. ஹென்றி எப்படிப்பட்ட மன்னன் ?
2. வீதியில் அழுதுகொண்டிருந்த சிறுவன் மன்னனிடம் என்ன கூறினான் ?
3. சிறுவனின் தாயார் ஆச்சரியப்பட்டது ஏன் ?
4. மாறுவேடத்துடன் வந்த மன்னன் எழுதிக் கொடுத்த சீட்டில் என்ன எழுதப்பட்டிருந்தது ?
5. அன்புள்ள மன்னன் யார் ?

## பயிற்சிகள்

1. பாடுபட்டு, கவலைக்கிடம், இரக்கம் — இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.
2. வினவினான், கூறினான், சென்றான், வந்தான்— இவை இறந்தகால வினைமுற்றுக்கள் அல்லவா ? இவற்றை நிகழ்கால, எதிர்கால வினைமுற்றுக்களாகக் கட்டம் போட்டு எழுது.
3. நாங்கள் தாயாரைக் காப்பாற்றுகிறோம் — இதில் செயப்படுபொருள் எது ?

## 15. கடிதங்கள்

### (1) தந்தைக்குக் கடிதம்

38, வைத்தியநாதன் தெரு,
சென்னை - 1.
15-9-53.

அன்பு மிகுந்த தந்தை அவர்களுக்கு,

வணக்கம்: இங்கு நானும், மாமாவும், மற்றவரும் நலம். தாயார், தாத்தா, தமக்கை இவர்களின் நலம் அறிய விரும்புகிறேன். நான் தினமும் தவருமல் பள்ளிக்கூடத்திற்குச் சென்று ஒழுங்காகப் பாடங்களைப் படித்துக் கொண்டு வருகின்றேன். தமிழ், கணக்கு இவ்விரண்டு பாடங்களில் முதல்வனுக இருக்கின்றேன். மற்றப் பாடங்களிலும் அடுத்தத் தேர்வில் முதல்வனுக விளங்க முயற்சி செய்துகொண்டு வருகின்றேன். பொங்கல் விடுமுறைக்கு ஊருக்கு வர எண்ணியுள்ளேன். வணக்கம்.

இங்ஙனம்,
தங்கள் அன்புள்ள மைந்தன்,
ச. இளங்கோவன்.

முகவரி:

திரு. ந. சம்பந்த முதலியார் அவர்கள்,
40, நெல்லையப்பர் தெரு,
திருநெல்வேலி.

## (2) அழைப்பு இதழ்

3, முத்துரங்கம் தெரு,
தாம்பரம்,
24-10-'53.

அன்பு கனிந்த நண்பன் அருளரசனுக்கு,

வணக்கம். இங்கு அனைவரும் நலம். உன் நலனையும், உன் பெற்றோர் நலனையும் அறிய அவா. (31-10-'53) ஞாயிற்றுக் கிழமை என் தம்பி எழிலரசன் பிறந்த நாள் விழா. அன்று பகல் விருந்து நடைபெறும். அதற்கு நீ அவசியம் வந்திருந்து சிறப்பிக்க வேண்டுகிறேன். உன் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருப்பேன். தவருது வருக.

இங்ஙனம்,
உன் அன்புள்ள நண்பன்,
ச. செந்தில் குமரன்.

முகவரி:

திரு. சி. அருளரசன்,
12, சிவப்பிரகாசம் தெரு,
வேலூர்.

## (3) வேண்டுகோள் கடிதம்

வள்ளுவர் மன்றம்,
சென்னை-1
15-12-'53.

அன்பு மிக்க ஐயன்மீர்,

வணக்கம். எங்கள் மன்றத்தின் ஆண்டு விழா இம்மாதம் 27-ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமை நடைபெறும். அவ் விழாவிற்குத் தமிழ்ப் பேராசிரியர் திரு. டாக்டர் மு. வரத ராசனார் அவர்கள் தலைமை வகிக்க இசைந் துள்ளார்கள், தாங்கள் அன்று வந்திருந்து 'வள்ளுவரும் குறளும்' என்னும் பொருளைப் பற்றிச் சொற்பொழிவு ஆற்றும்படி எங்கள் மன்றத்தின் சார்பில் உங்களை வேண்டிக் கொள்கிறேன்.

வணக்கம்.

இங்ஙனம்,
ச. சிவகுமாரன்,
செயலாளன்.

முகவரி:

திருவாளர்
சி. சு. அருணகிரிநாதர் அவர்கள்,
தலைமைத் தமிழாசிரியர்,
தொண்டைமண்டலம் உயர்நிலைப்பள்ளி,
சென்னை -1.

## (4) வியாபாரக் கடிதம்

2, வடக்கு வீதி,
சிதம்பரம்,
7-12-53'

மானேஜர்,
சி. குமாரசாமி நாயுடு அண்டு சன்ஸ்,
சென்னை-1.

ஐயா,

தயவு செய்து கீழே குறிக்கப்பட்டுள்ள புத்தகங்களை என்னுடைய முகவரிக்குத் தபால் மூலமாக அனுப்பி வைக்குமாறு வேண்டிக்கொள்கிறேன்.

1. ஆங்கிலத் தமிழ் அகராதி 6 படிகள்
2. குமரன் தமிழ் வாசகம் முதற் புத்தகம் 24 படிகள்
3. ,, இரண்டாம் புத்தகம் 24 படிகள்
4. ,, மூன்ரும் புத்தகம் 24 படிகள்

இங்ஙனம்,
தங்கள் அன்புள்ள,
ஈ. ச. கோபாலன்.

## பயிற்சி

1. உன் அண்ணனின் திருமணத்துக்காக விடுமுறை கேட்டு ஆசிரியருக்கு ஒரு கடிதம் எழுது.

2. உன் ஊரில் நடைபெற்ற விழா ஒன்றைக் குறித்து நண்பனுக்குக் கடிதம் எழுது.

3. உன் பள்ளிக்கூடத்துத் தமிழ்ச் சங்கத்தில் வந்து பேசுமாறு ஒரு பெரியார்க்குக் கடிதம் ஒன்று எழுது.

4.

| | இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் |
|---|---|---|---|
| நான் | படித்தேன் | படிக்கிறேன் | படிப்பேன் |
| நீ | படித்தாய் | படிக்கிறாய் | படிப்பாய் |
| அவன் | படித்தான் | படிக்கிறான் | படிப்பான் |

இதைக் கவனித்துக்கொண்டு கீழுள்ள கட்டத்தைப் பூர்த்தி செய்:

| | இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் |
|---|---|---|---|
| அண்ணன் | — | — | — |
| தங்கை | — | — | — |
| நாங்கள் | — | — | — |
| நீங்கள் | — | — | — |



## 16. தேசிங்கு இளமை



குழந்தை பிறந்த ஏழாம் மாதம்
குலுங்கி விழுந்தானும்
தங்கத் தொட்டிலை எட்டி உதைத்துத்
தரையில் விழுந்தானும்
தொட்டிலை விட்டுக் கீழே இறங்கித்
துள்ளி விழுந்தானும்
பத்தாம் மாதம் தவழ்ந்து நடந்தான்
பலரும் அறியத்தான்
பள்ளிக் குப்போய் எழுதப் படிக்கப்
பாலனும் அறிந்தானும்
குதிரை ஏறிச் சவாரி செய்து
கோட்டையில் வருவானும்

ஆண்டவரைப் பூசனை செய்து
அழகாய் வருவானும்
தாயார் எடுத்து மடியில் வைத்துச்
சாந்தி கழிப்பாளாம்
முக்கனி சர்க்கரை பாலமு துடனே
முன்னே ஊட்டுவாளாம்
கொஞ்சிக் கொஞ்சி உண்பான் ஐயா
குழந்தை தேசிங்கு
கூடப் படித்த மாபூஸ் கானைக்
கூப்பிட் டழைப்பானும்
இருவரும் கூடிக் குதிரை ஏறி
எங்கும் திரிவாராம்
காடுமலைகள் செடிகள் எல்லாம்
கலங்க அடிப்பாராம்
புலியே சிங்கம் கரடி கண்டால்
புகுந்து வெட்டுவாராம்
பத்துப் பனைமரம் உயரக் கிளம்பி
பல்டி அடிப்பாராம்
குன்றுகள் ஏறிக் குதித்தா ரானல்
குதிரைப் பள்ளமாகும்
தேறித் தெளிந்தான் வித்தைகள் ஆடித்
தேசிங்கு மகிபாலன்
அந்தப் படியே ஐந்து வருஷம்
ஆடித் திரிந்தானும்.

———

அருஞ்சொற் பொருள்: பூசனை = வழிபாடு, குன்று = மலை, தேஜ்சிங் என்ற பெயர் தேசிங்கு என வழங்குகிறது, மகிபாலன் = அரசன்.

## வினாக்கள்

1. தேசிங்கு ஏழாம் மாதமும் பத்தாம் மாதமும் என்னென்ன செய்தான்?
2. தாயார் என்னென்ன செய்தார்?
3. தேசிங்கின் நண்பன் யார்?
4. காட்டில் எந்தெந்த மிருகங்களை வெட்டினர்?
5. தேசிங்குக்குத் தாயார் என்ன உணவு ஊட்டி டினர்?

## பயிற்சிகள்

1. தங்கத் தொட்டில், முக்கனி, பாலமுது—பிரித்து எழுது.
2. இப்பாடலிலிருந்து ஐந்து வினைமுற்றுக்களை எடுத்து எழுது.
3. தேசிங்கு எவ்வாறு விளையாடினன்? இது வினா வாக்கியம்.

   தேசிங்கும் நண்பனும் விளையாடினர்கள்—இது செய்தி வாக்கியம்.

   நாளைக்குப் பள்ளிக்கூடம் இல்லை — இது எதிர் மறை வாக்கியம்.

   இவற்றைத் தெரிந்துகொள்ளுங்கள்.



## 17. சாரணர்

(உரையாடல்)

பழனி: சங்கரா, நீ நமது பள்ளிக்கூடத்தில் உள்ள சாரணர் இயக்கத்திலே ஏன் சேரக் கூடாது? உன்னைப்போன்ற சிறுவர்கள் அந்த இயக்கத்தில் சேர்ந்து நாட்டுக்குப் பணி புரிய வேண்டாமா?



சங்கரன்: நண்பா, நேற்று என்னுடைய தந்தையார் கூட நீ ஏன் சாரணர் இயக்கத்தில் சேரவில்லை என்று என்னைக் கேட்டார். அப்பொழுது நான் இவ்வாண்டு சேரப்போவதாகக் கூறினேன். அதில் சேர்வதனுல் உண்டாகும் நன்மைகளை நீ எனக்கு விளக்கமாகச் சொல்ல வேண்டும்.

**பழனி:** சரி. அப்படியே சொல்கிறேன் கேள். மனிதன் எப்பொழுதும் தன்னலம் உள்ளவனுக இருக்கக்கூடாது. பிறருக்கு எந்த வகையிலாவது உதவி செய்ய வேண்டும். சாதி, மத வேறுபாடுகளும், உயர்வு, தாழ்வு என்ற எண்ணங்களும் இல்லாமல் அனைவரும் சமம் என்ற நல்லெண்ணத்துடன் இருக்கச்செய்வது சாரணர் இயக்கம் ஆகும்.

**சங்கரன்:** நல்லது. இன்னும் என்னென்ன நன்மைகள் உண்டு?

**பழனி:** நம்முடைய கடமைகளை ஒழுங்காகச் செய்தல், தலைவனுக்குக் கீழ்ப்படிந்து நடத்தல், எப்பொழுதும் இனிய முகத்தோடு இன்சொல் பேசுதல், எல்லோருடனும் ஒற்றுமையாக வாழ்தல், உண்மைபேசுதல் முதலிய நற்பழக்கங்கள் இந்த இயக்கத்தால் உண்டாகும்.

**சங்கரன்:** நல்லது. இந்த இயக்கத்தை முதலில் ஆரம்பித்தவர் யார்?

**பழனி:** இந்த இயக்கத்தை முதலில் ஆரம்பித்தவர் சர். இராபர்ட் பேடன்பவல் என்பவர். அவர் இங்கிலாந்து தேசத்தைச்

சேர்ந்தவர்; ஒரு போர்வீரர். ஒவ்வொரு வரும் தம்முடைய கடமைகளை ஒழுங் காகச் செய்துகொண்டு மற்றவர்களுக் காக மனமகிழ்ச்சியுடன் பாடுபட வேண் டும் என்ற உயர்ந்த நோக்கத்தோடு இதை 1918-ஆம் ஆண்டு ஆரம்பித் தார். இப்பொழுது 'பாரத சாரணர் இயக் கம்' என்ற பெயருடன் அது இந்தியா வில் விளங்குகிறது.

**சங்கரன் :** இவ்வியக்கத்தில் சேர்வதற்கு வய துக் கட்டுப்பாடு ஏதேனும் உண்டா?

**பழனி :** ஆம். பதினேரு வயதிற்குட்பட்ட வர்கள், பதினேரு வயதிற்கு மேற்பட்டுப் பதினெட்டு வயதுக் குட்பட்டவர்கள், அதற்கு மேற்பட்டவர்கள் என்று முப்பிரி வினராகப் பிரிக்கலாம். பதினேரு வயதிற்குட்பட்ட சிறுவர்கள் குருளையர் அல்லது இளஞ்சாரணர் என அழைக்கப் படுவர். மற்றவர் சாரணர் என அழைக் கப்படுவர். பதினெட்டு வயதுக்கு மேற் பட்டவர் திரிசாரணர் என அழைக்கப் படுவர்.

**சங்கரன் :** நான் இவ்வியக்கத்தில் சேர என்ன செய்ய வேண்டும்?

பழனி: முதலில் உன்னுடைய பெற்ருேரிடம் அல்லது பாதுகாவலரிடம் அனுமதி பெற வேண்டும். பிறகு நீ ஓர் உறுதிமொழி கொடுக்க வேண்டும்.

சங்கரன்: என்ன உறுதிமொழி?

பழனி: "நான், என்ஞல் முடிந்தவரை கடவுளுக்கும் நாட்டுக்கும் என்னுடைய கடமையைச் செய்வேன்' என்பதுதான் உறுதிமொழி. இதைப் பல சாரணர்கள் முன்னிலையிலும், ஆசிரியர் முன்னிலையிலும் சொல்லவேண்டும்.

சங்கரன்: சாரணர் இயக்கத்தைப் பற்றிய முக்கியமான செய்திகளைத் தெரிந்து கொண்டேன். நன்றி.

பழனி: நீ உன் நண்பர்களுடன் இந்த இயக்கத்தில் சேர்ந்து நாட்டுக்குப் பணி புரிய வேண்டும் என்பதுதான் என்னுடைய ஆவல்.

சங்கரன்: நண்பா, சாரணர் இயக்கத்தில் பல ஆண்டுகளாக இருந்து சேவை செய்து வரும் நீ பிறருக்கு எவ்வாறு உதவி செய்திருக்கின்ருய்?

பழனி: நன்றாகக் கேட்டாய்! பொதுவாக, ஒருவர் பிறருக்குச் செய்யும் உதவியைப் பற்றி மற்றவரிடம் பெருமையாகப் பேசக் கூடாது. இருந்தாலும், நீ கேட்டதற்காக ஒரு நிகழ்ச்சியை மாத்திரம் குறிப்பிடுகின்றேன். ஒருநாள் நம் பள்ளிக்கூடத்தில் ஒரு மாணவன் ஒரு தூணில் இடித்துக் கொண்டான். நெற்றியில் காயம்பட்டு விட்டது. உடனே அவனுக்குச் செய்ய வேண்டிய முதல் உதவி செய்து அவனை மெதுவாக அருகில் இருந்த மருத்துவர் இல்லம் அழைத்துச் சென்று ஆவன செய்வித்தேன். இதுபோல் என்னால் முடிந்தவரை பல உதவிகள் செய்து உள்ளேன். இனியும் செய்து வருவேன்.

சங்கரன்: நண்பா, நீ செய்தது நல்ல உதவி. இவ்வளவு நாட்களாக இந்த இயக்கத்தில் சேராது இருந்துவிட்டோமே என்று இப்பொழுது எண்ணுகிறேன், நாளைக்கே நான் சேர்ந்துவிடுகின்றேன்.

பழனி: சரி. அப்படியே செய். (இருவரும் செல்கின்றனர்.)

———

அருஞ்சொற் பொருள்: அனுமதி = உத்தரவு, இல்லம் = வீடு.

## வினாக்கள்

1. சாரணர் இயக்கத்தில் சேர்வதனால் உண்டாகும் நன்மைகள் எவை?
2. சாரணர் ஆவதனால் என்னென்ன நற்பழக்கங்கள் உண்டாகும்?
3. சாரணர் இயக்கத்தை முதலில் ஏற்படுத்தியவர் யார்? எந்த நோக்கத்துடன் ஏற்படுத்தினர்?
4. குருநாயர் யார்? திரிசாரணர் யார்?
4. சாரணர் கூறும் உறுதி மொழியை எழுது.
6. பழனி செய்த உதவி என்ன?

## பயிற்சிகள்

1. பிரித்து எழுது :—மனமகிழ்ச்சி, நல்லெண்ணம், செய்துள்ளேன்.
2. சேர்கின்றேன், செய்தேன் என்ற தன்மை ஒருமை வினைகளைத் தன்மைப் பன்மை வினைகளாக எழுது.
3. பொருத்தி எழுது :—

| | |
|---|---|
| நான் | படித்தாய் |
| நாங்கள் | பாடுகிறாள் |
| நீ | எழுதுகிறாள் |
| நீங்கள் | படிக்கிறேன் |
| அவன் | எழுதுகிறீர்கள் |
| அவள் | நிற்கிறார்கள் |
| அவர்கள் | படிக்கிறோம் |

# 18. கதைப் படம்


















(முதல் உதவி)

## வினுக்கள்

1. முதல் படத்தில் நீ என்ன பார்க்கின்ருய்?
2. இரண்டாவது படத்தில் சிறுவன் ஏன் கீழே விழுந்து கிடக்கின்ருன்?
3. கீழே விழுந்த சிறுவனை யார் எவ்வாறு காப்பாற்றுகின்றனர்?
4. நான்காவது படத்தில் நீ என்னென்ன காண்கிருய்?
5. ஐந்தாவது படத்தில் சாரணர், சிறுவனுக்கு எவ்வாறு உதவி செய்கின்றனர்?
6. ஆருவது படத்தில் என்ன காண்கிருய்?
7. ஐந்தாவது படத்தில் ஒருவண்டி நிற்கிறதல்லவா? அது என்ன வண்டி? அதன் உபயோகம் என்ன?
8. ஏழாவது படத்தில் யார் யார் இருக்கின்றனர்? அவர்கள் என்ன செய்கின்றனர்?
9. ஆருவது படம் எந்த இடம்? அங்கே என்ன செய்கிருர்கள்?
10. எட்டாவது படத்தில் உள்ளவர் யார் யார்? என்ன செய்கின்றனர்?
11. இப்படக் கதைக்கு என்ன பெயரிடலாம்?
12. இக்கதையால் நீ அறிவது என்ன?

## பயிற்சிகள்

1. சாரணர் இயக்கத்தில் சேர்வதன் அவசியத்தைப் பற்றி உன் நண்பனுக்குக் கடிதம் எழுது.

2. பின்வரும் சொற்களைக் கீழுள்ள அட்டவணையில் தகுந்த இடங்களில் அமைத்து எழுது:

படித்தான், எழுதினேம், விளையாடினார்கள், ஓடியது, மலையேறினாய், பாடுவீர்கள், வருவான்.

நீ நேற்று ———

அவன் நாளை ———

நாங்கள் இன்று காலை ———

குதிரை இரவு ———

நீங்கள் நாளை ———

அவர்கள் காலை ———

குமரன் நேற்று ———

3. (.) முற்றுப்புள்ளி.
(:) முக்காற்புள்ளி.
(;) அரைப்புள்ளி.
(?) வினாக்குறி.
(!) உணர்ச்சிக்குறி.
("—") மேற்கோள்குறி. இவற்றைக் கவனித்துக்கொள். பாடங்களில் எங்கெங்கு இவை பயன்படுகின்றன என்பதைக் கவனித்துப்பார். இக்குறிகளைப் பயன்படுத்திப் பழகு.



## 19. நான்சன்

ஐரோப்பாவின் வடமேற்கில் நார்வே என்று ஒரு நாடு உள்ளது. அந்த நாட்டில் பிரிட்ஜோவ் நான்சன் என்பார் 1861-ஆம் ஆண்டு பிறந்தார். அவர் ஒரு பெரிய ஆராய்ச்சியாளர், நாட்டுப்பற்று கொண்ட நல்லார்; விஞ்ஞானத் துறையில் விருப்பம் கொண்டவர்; ஊக்கம் நிறைந்த உத்தமர்.

அவர் ஆர்க்டிக் கடலில் உள்ள கிரீன்லாந்து என்னும் தீவைப் பற்றி ஆராயத் தொடங்கினர். அத்தீவு மிகப்பெரிய மலை போன்ற பனிப்பாறைகள் நிறைந்த இடம். திடீரென்று பனிப்பாறைகள் உருகிப் பிளந்து பேரொலியுடன் கடலில் விழும். அந்த வழியாகச் செல்லும் கப்பல்கள் இத்தகைய பனிப் பாறைகளால் மோதப்படுமாயின் உடனே அவை கடலுக்குள் மூழ்க நேரிடும். நீரில் தெப்பம் மிதப்பது போல் பெரிய பனிக்கட்டிகள் தண்ணீரில் மிதக்கும். பெரிய பனி மேடுகளும் பள்ளத்தாக்குகளுமே அப்பகுதி முழுவதும் இருக்கும். அவ்விடத்தை ஆராய்ச்சி செய்யவும், ஒரு கரையில் புறப்பட்டு மறுகரையை அடையவும் அவர் விரும்பினர்.

நான்சன், கிரீன்லாந்து தீவுக்குச்சென்று, அதன் அமைப்பை அறியப்போவதாகத் தெரிவித்தார். இதைக்கேட்ட மக்கள் "இது என்ன வேலை? யாரால் முடியும்? இவன் ஒரு பைத்தியக்காரன்" என்றெல்லாம் இகழ்ந்தார்கள்; ஊக்கத்தைக் குறைத்தார்கள்.



ஆனால் நான்சன் மனம் தளரவில்லை. இளமையிலிருந்தே மலை ஏறுதல், காட்டுக்குச் செல்லுதல், தனித்து வாழ்தல், எப்படிப்பட்ட துன்பத்தையும் பொறுத்துக் கொள்ளுதல் ஆகியவற்றில் அவர் பழக்கப்பட்டவர். ஆதலின் "யார் என்ன சொன்னாலும் நான் கிரீன்

லாந்து தீவைக் கண்டே வருவேன்'' என்று உறுதியுடன் புறப்படலானார்.

நார்வே அரசாங்கத்திடம் தனக்கும் தன்னுடன் வர விரும்பிய துணைவர்களுக்கும் பொருள் உதவி செய்யுமாறு நான்சன் கேட்டார். ஆனால் இம்முயற்சி பயனுள்ளதன்று என்று எண்ணிய அந்த அரசாங்கத்தார்பொருளுதவி புரிய மறுத்துவிட்டனர். பிறகு நற்குணம் வாய்ந்த ஒரு செல்வரின் உதவியைக் கொண்டு தங்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்கள், கூடாரங்கள், ஆயுதங்கள், உடைகள், மரச்செருப்புகள், சறுக்கு வண்டிகள் முதலியவற்றைத் தயாரித்துக்கொண்டு ஒரு கப்பலில் புறப்பட்டனர்.

கிரீன்லாந்து தீவை அணுகும்போது அவர்களுடைய கப்பல் பனிப்பாறைகளின் நடுவே சிக்கிக்கொண்டது. அதனால் கரைக்குப் பல மைல் தூரத்திலேயே கப்பலை நிறுத்திவிட்டுச் சிறு படகுகளில் ஏறிக்கொண்டு சென்றார்கள். பனிக்கட்டிகளை உடைத்து அவற்றின் நடுவிலும், பனிக்கட்டிகளின் மேலும் படகை ஓட்டிக்கொண்டும், இழுத்துக் கொண்டும் சொல்ல முடியாத துன்பங்களைப் பொறுத்துக் கொண்டு அந்தத்தீவின் மேற்குக் கரையை

அடைந்தார்கள். பலமுறை நான்சன் உயிருக்கே ஆபத்து ஏற்படக்கூடிய அளவுக்குத் துன்பங்கள் நேரிட்டன. கடுமையான இந்த முயற்சியில் கடைசியாக அவர் வெற்றி பெற்ருர். "வெற்றியுடன் கிரீன்லாந்து தீவைக் கடந்து சென்று வருவேன்; இல்லையாஞல் அங்கேயே மாள்வேன்" என்ற உறுதியுடன் சென்ற நான்சனும் அவர் துணைவர்களும் அத்தீவை முதலாவதாகக் கடந்தனர். கீழ்க் கரையிலிருந்து மேற் கரையை அடைந்து திரும்பினர்.

இச்செய்தி அறிந்த மக்கள் நான்சனையும் அவர் துணைவர்களையும் பாராட்டினர். பட்டங்கள் கொடுத்துப் பெருமைப்படுத்தினர். இவரைப்போல் பல நாடுகளையும் கண்டறிய ஆவல் கொண்டு பாடுபட்டவர்கள் பலருண்டு. அவர்களுடைய முயற்சிகள் போற்றத் தக்கவை.

நான்சன் இப்பெரு முயற்சியில் வெற்றி பெற்றதோடன்றி, மேலும் பல அரிய செயல்களைச் செய்து என்றும் அழியாத புகழைப் பெற்றுவிட்டார். 'முயற்சி திருவினை ஆக்கும்' என்பது உண்மையல்லவா?

அருஞ்சொற் பொருள் :— ஆண்டு = வருஷம், மாள்வேன் = இறப்பேன், திரு = செல்வம் (புகழ்).

## வினக்கள்

1. நான்சன் எந்த நாட்டைச் சேர்ந்தவர்? எப்பொழுது பிறந்தார்?
2. 'கிரீன்லாந்து' தீவு எங்கே இருக்கிறது?
3. 'கிரீன்லாந்து' தீவு எப்படிப்பட்ட பிரதேசம்?
4. 'கிரீன்லாந்து' தீவுக்குச் செல்ல விரும்பிய நான்சனை மக்கள் எவ்வாறு இகழ்ந்தனர்?
5. நான்சன் இளமையில் எவ்வாறு பழகினர்?
6. 'கிரீன்லாந்து'க்குச் செல்லும்போது என்னென்ன பொருள்களை எடுத்துச் சென்ருர்கள்?
7. நான்சன் கூட்டத்தார் அனுபவித்த கஷ்டங்களை எழுது.
8. நான்சனுடைய மன உறுதியை எப்படி அறிய முடிகிறது?
9. நான்சனுடைய பெருமைகளை எழுது.
10. நான்சனுக்கு நார்வே அரசாங்கம் பொருளுதவி செய்ய மறுத்தது ஏன்?

## பயிற்சிகள்

1. மூடப்பட்ட, பேரொலி, கடந்தனர், வெற்றி — இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.
2. நான்சன் மன உறுதியைப் பற்றிப் பத்து வரிகளில் எழுது.
3. நான் கிரீன்லாந்து தீவைக் கண்டே வருவேன் — இவ்வாக்கியத்தில் நான் என்பது தன்மை ஒருமைப் பெயர். இதற்குப் பன்மை நாம், நாங்கள் என்பன.

   நான் — வருவேன் இதுபோல கீழ் வருவனவற்றைப் பூர்த்திசெய்.

   நாம் ———

   நீ ———

   அவன் ———

4. எழுவாய் பயனிலைகளைப் பொருத்தி எழுது :

| | |
|---|---|
| 1. நான்சன் | பாராட்டினர். |
| 2. கப்பல் | உதவி செய்தார். |
| 3. மக்கள் | சிக்குண்டது. |
| 4. செல்வர் | கேட்டார். |

5. கீழ்க்கரை, மேற்கரை — பிரித்து எழுது.



# 20. பத்திரிகைகள்

இவ்வுலகில் நடைபெறும் பல செய்திகளை நமக்கு அறிவிக்கும் தாள்கள் செய்தித் தாள்கள் அல்லது பத்திரிகைகள் எனப்படும். பல நாடுகளில் நடைபெறும் ஒவ்வொரு செய்தியையும் பத்திரிகைகளில் காணலாம். அரசியல் சம்பந்தமான செய்திகளும், பயிர்த் தொழில், கைத்தொழில் முன்னேற்றத்தைப் பற்றிய செய்திகளும், நாட்டு வாணிகத்தைப் பற்றிய செய்திகளும், விஞ்ஞான வளர்ச்சியைப் பற்றிய தகவல்களும், பெருமக்கள் பலருடைய பேருரைகளும் பிறவும் பத்திரிகைகளில் நாம் காணலாம்.

செய்தித் தாள்கள் பல மொழிகளிலும் வெளிவருகின்றன. தமிழில் தினமணி, தினத்தந்தி, பாரததேவி, சுதேசமித்திரன், விடுதலை, நம் நாடு முதலிய தினச் செய்தித் தாள்கள் வெளிவருகின்றன. இவையன்றி வாரத்தாள்கள், மாத இதழ்கள் முதலியனவும் வருகின்றன.

இளைஞர் முதல் முதியோர் வரை யாவரும் தினமும் செய்தித் தாள்களைப் படிக்க வேண்டும். அப்பொழுதுதான் நாம்

உலகம் அறிந்தவர்களாக வாழமுடியும். விஞ்ஞான வளர்ச்சியால் இப்பொழுது உலகத்தில் ஒரு பாகத்தில் நடக்கும் நிகழ்ச்சிகளை மற்றொரு பாகத்தில் உள்ளவர்கள் உடனே தெரிந்துக்கொள்ள முடிகிறது. அதற்கு முக்கியமாகப் பயன்படுவது 'ரேடியோ' எனப்படும் வானொலியாகும். வானொலியின் மூலமாகச் சில முக்கியமான செய்திகளைச் சுருக்கமாக அறிவிப்பார்களே தவிர, செய்தித்தாள்களில் வருவதுபோல விளக்கமாகச் சொல்ல முடியாது. ஆதலின் அனைவரும் செய்தித்தாள் படிக்கும் பழக்கத்தைக் கைக்கொள்ள வேண்டும்.

பயிர்த்தொழில் வளர்ச்சியைப் பற்றிப் புதிய முறைகள் பல பத்திரிகைகளில் கட்டுரைகளாக வருகின்றன. ஜப்பானியர் நல்ல முறையில் பயிரிட்டு அதிகமாகப் பயிராக்குகின்றார்கள். நாமும் அம்முறையைப் பின்பற்ற வேண்டும். அதற்கு இவ்வாறு செய்ய வேண்டும் என்பதைப்போன்று வருகின்ற கட்டுரைகளை நம் நாட்டு விவசாயிகள் படிப்பதனால் நன்மை யுண்டாகும் அல்லவா?

வியாபாரத் துறையில் இன்னின்ன பொருள்கள் இன்னின்ன விலையில் விற்கின்

றன என்ற செய்திகளும், பொன், வெள்ளி, உணவுப் பொருள்கள், எண்ணெய் வகைகள் முதலான பொருள்களின் விலைநிலைமைகளும் பிறவும் அறிவிக்கப்படுகின்றன. பருவநிலை, எப்பொழுது எங்கே மழை பெய்யும் என்பன போன்ற நல்ல தகவல்களும் பத்திரிகைகள் மூலம் நமக்குத் தெரிகின்றன. இன்னும் பல ஆச்சரியமான செய்திகளும், இனிய கதைகளும் பிறவும் பத்திரிகைகளில் வருகின்றன. பல நாடுகளில் நடக்கும் முக்கிய நிகழ்ச்சிகளின் படங்களும், இயற்கைக் காட்சிகள் நிறைந்த இடங்களின் படங்களும், பெரிய தலைவர்களின் படங்களும் பத்திரிகைகளில் வருகின்றன.

சிறுவர்கள் பத்திரிகைகளைப் படிக்கும் போது அவர்களுக்கு வேண்டிய முக்கியமான செய்திகளை ஒரு நோட்டுப் புத்தகத்தில் குறித்து வைத்துக்கொள்ளுதல் நலமாகும். பிறகு அவசியம் ஏற்படும்போது அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளலாம். சிறுவர்கள் அவ்வாறு நோட்டுப் புத்தகத்தில் குறித்துக் கொள்வதென்றால் எப்படிச் செய்ய வேண்டும் என்பதைப் பின்வரும் உதாரணத்திலிருந்து தெரிந்துகொள்வார்களாக.

| நாள் | இடம் | செய்தி |
|---|---|---|
| 15-8-'53 | டில்லி | இந்திய சுதந்தர தின விழா. இந்திய முதலமைச்சர் நேரு அவர்கள் செங்கோட்டையில் கொடியேற்றினர். குடியரசுத் தலைவர் சொற்பொழிவு. |
| | சென்னை | சென்னை கவர்னர் ஸ்ரீ பிரகாசா அவர்கள் கோட்டையில் கொடி ஏற்றினர். பள்ளிக்கூடத்தில் சுதந்தர தின விழா சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. |
| 17-8-'53 | டில்லி | ஆந்திர ராஜ்ய அமைப்பு பற்றிய 'மசோதா' பாராளு மன்றத்தில் விவாதிக்கப்பட்டது. |

இம் மாதிரியான குறிப்புக்கள் எடுத்துக் கொள்ளுதல் நல்லது. சில பத்திரிகைகளில் வரும் முக்கியமான கட்டுரைகளையும், அறிஞர்களின் சொற்பொழிவுகளையும் அப்படியே வெட்டி எடுத்து வைத்துக்கொள்ளுதலும்

நல்லது. இவ்வாறெல்லாம் செய்துவரின் சிறந்த உலக அறிவு உள்ளவராகவும், பேச்சாளராகவும், எழுத்தாளராகவும் விளங்கலாம்.

பத்திரிகைகளில் வருகின்ற சில படங்களைக் கத்திரித்து எடுத்து அவற்றை ஒரு நோட்டுப் புத்தகத்தில் ஒட்டி வைத்துக்கொள்ளலாம். இவ்வாறு செய்வது இளைஞர்களுக்கு ஒரு நல்ல பயிற்சியாக இருக்கும். நீங்கள் தினமும் பத்திரிகை பார்த்து மேற்சொன்னவாறு செய்து வரவேண்டும்.

---

**அருஞ்சொற் பொருள் :—** வாணிகம் = வியாபாரம், தகவல்=செய்தி, பேருரை=சொற்பொழிவு, மசோதா = சட்டம்.

**வினாக்கள்**

1. செய்தித்தாள் என்றால் என்ன ?
2. செய்தித்தாள்களில் காணப்படும் முக்கியமான செய்திகள் எவை ?
3. தினச்செய்தித்தாள்கள் சிலவற்றின் பெயர்களை எழுது.
4. எல்லோரும் பத்திரிகை படிக்கவேண்டும். ஏன் ?

5. பத்திரிகை படிப்பதனல் விவசாயிகள் அடையும் நன்மைகள் என்ன ?

6. வியாபாரிகள் செய்தித்தாள் படிப்பதனல் அடையும் பயன் எவை ?

7. சிறுவர்கள் பத்திரிகை படிக்கும்போது என்ன செய்யவேண்டும் ?

## பயிற்சிகள்

1. நீ விரும்பும் பத்திரிகை ஒன்றுக்கு உன் பள்ளிக்கூடத்து விழா ஒன்றைப்பற்றி ஒரு கட்டுரை எழுதி அனுப்பு.

2. செய்தித்தாள் படிக்காத உன் நண்பன் ஒருவனுக்கு, நாள்தோறும் செய்தித்தாள் படிக்குமாறு வற்புறுத்தி ஒரு கடிதம் எழுது.

3. உனக்குத் தெரிந்த வார, இருவார, மாதப் பத்திரிகைகளின் பெயர்கள் சிலவற்றை எழுது.

4 கோடிட்ட இடங்களைப் பூர்த்தி செய் :—

——— தினமும் படிப்பான்

அவள் நேற்று ———

நான் நாளை ———

நீங்கள் ——— வந்தீர்கள்

நாங்கள் சென்ற மாதம் ———

——— எப்பொழுது வருவாய் ?



# 21. பனைமரம்



| | |
|---|---|
| பனைமரமே ! | பனைமரமே ! |
| ஏன் வளர்ந்தாய் ? | பனைமரமே ! |
| நான் வளர்ந்த | காரியத்தை |
| நாட்டாரே | சொல்லுகின்றேன் ; |
| படுக்க நல்ல | பாய் ஆவேன் ; |
| வசிக்க நல்ல | வீடாவேன் ; |
| வெட்ட நல்ல | விறகாவேன் ; |
| வீடு கட்ட | மரமாவேன் ; |
| கட்ட நல்ல | கயிறுவேன் ; |
| கன்று கட்டத் | தும்பாவேன் ; |
| மட்டமுள்ள | உறியாவேன் ; |
| மாடு கட்டத் | தும்பாவேன் ; |

பலத்த சுமைச் சால்களுக்குப்
புரிமணையும் நானாவேன் ;
எழுதுகின்ற பிள்ளைகட்கே
எழுத்தாணிக் கூடாவேன் ;
ஓதுகின்ற பிள்ளைகட்கே
ஓலைத்தடுக்கும் நானாவேன் ;
நனைந்து வரும் பேர்களுக்கு
நல்ல குடை நானாவேன் ;
பசித்து வரும் பேர்களுக்கு
பனம்பழமும் நானாவேன் ;
சித்திரைக் கோடையிலே
சிறந்த நல்ல நுங்காவேன் ;
இராமாயணம் என்னாலே ;
பாரதமும் என்னாலே ;
வர்த்தகரும் செட்டிகளும்
வழியறிவ தென்னாலே ;
பல சரக்கு மண்டியிலே
பத்திரமாய் நானிருப்பேன் ;
ஏரிக்கரை மீதினிலே
எந்நாளும் வீற்றிருப்பேன்.

—பழைய பாடல்

---

அருஞ்சொற் பொருள் ;—தும்பு = கயிறு, ஓதுகின்ற = படிக்கின்ற, பலசரக்குமண்டி = மளிகைக் கடை.

## வினுக்கள்

1. பனைமரத்தால் உண்டாகும் நன்மைகள் எவை?
2. பசிப்பவர்க்குப் பனைமரம் எவ்வாறு பயன்படுகிறது?

## பயிற்சிகள்

1. கயிருவேன், பனம்பழம், ஏரிக்கரை — பிரித்து எழுது.
2. எழுதுகின்ற, ஓதுகின்ற—இவை என்ன காலம்?
3 குடை — கொடை, உறி — உரி, — இச்சொற்களின் வேறுபாட்டை அறிந்து வாக்கியங்களில் அமைத்து எழுது.
4. நிறுத்துக் குறிகளிட்டு எழுது :—

முருகன் கண்ணனைப் பார்த்து நீ நவராத்திரி விடுமுறையின்போது எங்கே சென்ருய் என்று விஞவினன் அதற்கு அவன் நான் செஞ்சிக்குச் சென்றிருந்தேன் என்று கூறினன் அப்படியானல் நீ செஞ்சியில் பார்த்தவற்றை எனக்குச் சொல் என்று முருகன் கேட்க கண்ணன் அவ்வாறே கூறினன்.

5. பனைமரத்தின் பயனைப்பற்றி ஒரு கட்டுரை எழுது.



## 22. துறைமுகத்தில் ஒரு நாள்

ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்குக் கடல் மூலமாகப் பயணம் செய்வதற்குப் பயன்படுவன கப்பல்கள். வியாபாரத்திற்கும் கப்பல்கள் மிகவும் பயன்படுகின்றன. அக் கப்பல்கள் வந்து தங்குமிடத்திற்குத் துறை முகம் என்று பெயர். நம் நாட்டில் சென்னை, பம்பாய், கல்கத்தா முதலான நகரங்களில் பெரிய துறைமுகங்களும், நாகப்பட்டினம், மங்களூர், தூத்துக்குடி முதலான நகரங்களில் சிறிய துறைமுகங்களும் உள்ளன.

நமது சென்னையில் உள்ள துறைமுகம் ஒரு பெரிய துறைமுகம் ஆகும் அங்கே பல கப்பல்கள் வந்து தங்குவதற்கு ஏற்ற வசதி கள் உள்ளன. ஒரு நாள் நானும், என் நண் பர்களும் அனுமதிச் சீட்டு ஒன்றைப் பெற் றுக்கொண்டு, சென்னைத் துறைமுகத்திற்குச் சென்றோம்; அங்கிருந்த கப்பல்களைக் கண் டோம். ஒரு கப்பலைத் தயாரிக்கப் பல கோடி ரூபாய் செலவாகும். உலகிலேயே மிகப் பெரிய கப்பலான 'எலிசபெத்' கப்பல் 50 கோடி ரூபாய்ச் செலவில் தயாரிக்கப் பட்டது என்று சொல்லுகிறார்கள்.

நாங்கள் கப்பலின் உள்ளே சென்ருேம். கப்பலில் நாங்கள் முதலில் பார்த்தது கனந் தூக்கி ('கிரேன்'). கப்பலிலிருந்து கரைக்கும், கரையிலிருந்து கப்பலுக்கும் எவ்வளவு கன மான பொருளேயும் விரைவில் எடுத்து வைக்க அது பயன்படுகின்றது. இது போன்ற பல கனந்தூக்கிகள் துறைமுகத்திலும் இருக் கின்றன.



பிறகு நாங்கள் கப்பலின் உள்ளே இருக் கின்ற ஓர் அறையில் சென்று சிற்றுண்டி அருந்திேேம். கப்பலின் இயந்திரம் ('என்ஜின்') உள்ள அறை திறந்து காட்டப் பட்டது. அதற்கு அருகில் செல்ல முடியாதபடி

அனல் வீசிற்று. அவ்வறையில் எப்படித்தான் வேலை செய்கிறார்களோ என்று நாங்கள் நினைத்தோம்.

கப்பலில் படிக்கட்டுக்கள் ஆங்காங்கே உண்டு. ஒவ்வொரு படிக்கட்டிலும் ஏறிச் சென்றால் ஒவ்வொரு இடத்தை அடைய லாம். கப்பலில் சில குழாய்களில் வெந்நீரும் சில குழாய்களில் குளிர்ந்த நீரும் வருதலைக் கண்டோம்.

கப்பலின் மேலேஇருந்து துறைமுகத்தை நோக்கினோம். அங்கே இருந்த பல கப்பல் களையும் விரிவாகப் பார்க்க முடிந்தது. எல்லாக் கப்பல்களிலும் ஒரு துவாரத்தின் வழியாகத் தண்ணீர் வந்துகொண்டிருந்தது. அது கப்பலின் உள்ளேயிருந்து வெளி வரும் கழிநீர் என்று சொன்னார்கள்.

நாங்கள் அன்று பார்த்த கப்பலின் பெயர் 'இந்தியன் எக்ஸ்போர்ட்டர்' என்பது. அக் கப்பல் மூன்றடுக்குகளை யுடையது. அக்கப்ப லில் பல கொடிகள் இருந்தன. அவற்றின் நடுவில் இருந்த கொடி சிகப்பு நிறமும், நடுவே நட்சத்திரமும் கொண்டது.

கப்பல்களில் சிற்றுண்டிச் சாலைகளும், பந்து ஆடும் இடங்களும் உண்டு. நாங்கள்

பார்த்த கப்பலில் அவைகள் இல்லை. ஏனென்றால் நாங்கள் பார்த்த கப்பல் பிரயாணிக் கப்பல் அல்ல. பொருள்களைக் கொண்டு செல்லும் வியாபாரக் கப்பல்.

கப்பல் தலைமை அதிகாரி 'கேப்டன்' என்று அழைக்கப்படுவார். கப்பல்களை வெளியே போகும் போது வழியனுப்பியும், வரும்போது வரவேற்றும் வருகின்ற படகுக்குப் 'பைலட்' என்று பெயர். பைலட் வெகு வேகமாய்ச் செல்லும்.

துறைமுகத்தில் நீண்ட பெரிய கொட்டகைகள் உள்ளன. அங்கெல்லாம் வெளிநாடுகளுக்குச் செல்ல வேண்டிய பலவகைப் பொருள்களும், வெளி நாடுகளிலிருந்து நம் நாட்டிற்கு இறக்குமதி செய்யப்படும் பொருள்களும் அடுக்கி வைக்கப்பட்டுள்ளன. சென்னைத் துறைமுகத்திலிருந்து தோல் முதலான பொருள்கள் அதிகம் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. அங்கே இருப்புப் பாதையும் இருக்கின்றது. துறைமுகக் காட்சியும், கப்பல் அமைப்பும் ஒவ்வொருவரும் பார்த்து மகிழக் கூடியனவாகும்.

---

அருஞ்சொற் பொருள் :—பயணம்=பிரயாணம், (யாத்திரை), அனல் = நெருப்பு, ஆங்காங்கு = அவ்வவ் விடங்களில்.

## வினாக்கள்

1. நம் நாட்டில் உள்ள பெரிய துறைமுகங்கள் மூன்றினையும், சிறிய துறைமுகங்கள் மூன்றினையும் எழுது.
2. 'கனந்தூக்கி' என்பது என்ன ? அதன் உபயோகம் யாது ?
3. 'பைலட்' என்பது என்ன ?
4. கப்பல் காட்சியைப் பற்றிப் பத்து வரியில் எழுது.
5. துறைமுகத்தில் பார்க்கக் கூடிய காட்சிகள் எவை ?

## பயிற்சிகள்

1. நிறுத்துக் குறிகள் இட்டு எழுது :—

 நாங்கள் பார்த்த கப்பல் இந்தியன் எக்ஸ்போர்ட்டர் என்பது அது மூன்றடுக்குகளையுடையது அதில் பல கொடிகள் இருந்தன அக்கொடி சிகப்பு நிறமும் நடுவே நட்சத்திரமும் கொண்டது

2. மூன்றடுக்கு, இருப்புப் பாதை, சிற்றுண்டி — பிரித்து எழுது.

## 23. கூட்டுறவுச் சங்கம்

ஓர் ஊரில் உள்ள மக்கள் பலரும் ஒன்று சேர்ந்து தங்கள் நன்மைக்காக நடத்துவது கூட்டுறவுச் சங்கமாகும். இச்சங்கம் பெரும் பாலும் ஏழைகளாக உள்ள விவசாயி களுக்கே மிகவும் பயன்படும். ஏனென்றல் அவர்கள் தங்கள் தொழிலான உழுதொழி லுக்கு வேண்டிய மாடுகள், உழு கருவிகள், விதைகள் முதலியவற்றை வாங்குவதற்குப் போதுமான பணமில்லாமல் துன்பப்படும் போது, இச்சங்கம் அவர்களுக்குப் பயன்படு கிறது, இச்சங்கத்தின் உதவி யில்லாவிடில் அவர்கள் பணம் உள்ளவர்களிடம் அதிக மான வட்டிக்குப் பணம் வாங்க வேண்டும். அதனல் வட்டித் தொல்லை மிகுந்து தங்கள் உழவின் பயனுன தானியங்களை யெல்லாம் மிகக் குறைந்த விலைக்கு விற்றுத் துன்பப்பட நேரிடும்.

இச்சங்கம் எப்படி உதவி செய்கிறது என்பதைக் கவனிப்போம். இச்சங்கத்திற்கு அதன் அங்கத்தினர்கள் கொடுக்கின்ற பங்குப்பணமும் அரசாங்கத்தார் கொடுக்கும் பணமும் மூலதனமாகும். அதைக் கொண்டு ஏழைகளுக்குக் குறைந்த வட்டியில் பணம்

கொடுத்து உதவுகின்றார்கள். ஒரு விவசாயி இச்சங்கத்தில் கடன் வாங்க விரும்பினால் தான் வாங்க விரும்பும் தொகைக்குத் தகுந் தாற்போல் முதலில் பங்குப் பணம் செலுத்த வேண்டும். பிறகு தன் நிலம் அல்லது வீட்டை அச்சங்கத்திற்கு அடமானமாக எழுதிக்கொடுக்க வேண்டும். பிறகுதான் பணம் கொடுப்பார்கள். வட்டியையும் அசலையும் சிறுகச் சிறுக பல ஆண்டுகளில் கொடுத்துக் கடனைத் தீர்த்துவிடலாம்.

ஒவ்வொருகிராமத்திலும் உள்ளவர்களே இச்சங்கத்தை நடத்த வேண்டியவர்கள் ஆவார்கள். அதன் அங்கத்தினர்கள் அனை வரும் சேர்ந்து தங்களுக்குள் ஒரு தலைவர், துணைத்தலைவர், செயலாளர் ஆகியவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். அவர்கள் மக்களுடைய நம்பிக்கைக்கு உரிய வர்களாகவும் நல்லொழுக்கம் உள்ளவர் களாகவும் இருக்க வேண்டும். இச்சங்கம் ஒழுங்காகவும், திறமையாகவும் நடக்கிறதா என்பதை அதற்கென்று நியமிக்கப்பட்டுள்ள அரசாங்க அதிகாரிகள் கவனிப்பார்கள்.

கூட்டுறவுச் சங்கம் இவ்வாறு கடன் கொடுப்பது தவிர, வியாபாரத் துறையிலும்

ஈடுபட்டு மக்களுக்கு உதவி புரியும். உதாரணமாக, விவசாயத்துக்கு வேண்டிய விதைகள், எருக்கள் முதலியவற்றையும் உணவுப் பொருள்களையும், ஆடை வகைகளையும் மொத்தமாகக் குறைந்த விலைக்கு வாங்கி அதிக இலாபம் இல்லாமல் ஏழைகளுக்கு விற்பனை செய்கின்றது.




இவ்வாறு செய்வதனால் ஏழைகளுக்குக் குறைந்த விலையில் நல்ல சரக்குகள் கிடைக்கின்றன. அன்றியும் இலாபத்தில் ஒரு பங்கும் அங்கத்தினர்களுக்குக் கிடைக்கிறது. இவ்வளவு நன்மைகளை உண்டாக்கும் கூட்டுறவுச் சங்கம் ஒவ்வொரு கிராமத்திற்கும் அவசியமாகும்.

கூட்டுறவுச் சங்க உறுப்பினர்களும், தலைவர், செயலாளர் முதலானவர்களும், இச் சங்கம் மக்கள் நன்மைக்காக ஏற்படுத்தப் பட்டது என்பதை எண்ணி எப்பொழுதும் நல்ல முறையில் தொண்டாற்ற வேண்டும். கணக்குகளைச் சரியாக வைத்துக் கொள்ள வேண்டும். அரசாங்கத்தார் மேற் பார்வையிட்டு நன்றாக வேலை செய்யும் கூட்டுறவுச் சங்கங்களுக்கு ஆக்கம் அளித்து ஊக்கப்படுத்துவர்.

இத்தகைய சங்கங்கள் நம் நாட்டில் வியாபாரம், தொழில் வளர்ச்சி முதலிய துறைகளிலும் ஏற்பட்டு எல்லோருக்கும் உதவி புரியவேண்டும்.

---

அருஞ்சொற் பொருள்: *தொல்லை = துன்பம், நியமிக்கப்பட்டு = ஏற்படுத்தப்பட்டு, ஆக்கம் = செல்வம், (ஆதரவு).*

## வினாக்கள்

1. *கூட்டுறவுச் சங்கம் என்றால் என்ன?*
2. *கூட்டுறவுச் சங்கத்தால் உண்டாகும் நன்மைகள் யாவை?*

3. கூட்டுறவுச் சங்கம் எவ்வாறு நடைபெறுகிறது?

4. அங்கத்தினர்களுக்கு உண்டாகும் நன்மைகள் யாவை?

5. விவசாயி ஒருவர் கூட்டுறவுச் சங்கத்தில் கடன் வாங்கவேண்டுமானல் என்ன செய்ய வேண்டும்?

6. சங்கம் நன்ருக நடைபெற என்ன செய்ய வேண்டும்?

## பயிற்சிகள்

1. பெரும்பாலும், தொகை, சிறுகச் சிறுக, மேற்பார்வை — இவற்றை உன் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுது.

3. கிராம மக்கள் சங்கத்தின் தலைவரைத் தேர்ந்தெடுப்பார்கள் — எழுவாய், பயனிலை, செயப்படுபொருளை எழுது.

நன்மை × ______ குறைந்த × ______

சிறுகச்சிறுக × ______ நம்பிக்கை × ______

இலாபம் × ______ பலர் × ______

3. அங்கத்தினர்கள், ஏழைகள், கிடைக்கின்றன, கவனிப்பார் — இவற்றை ஒருமைச் சொற்களாக எழுது.

## 24. குரங்கும் முதலையும்

(மௌனப் படிப்பு)

ஒரு காட்டின் நடுவில் ஆழமான ஆறு ஒன்று இருந்தது. அந்த ஆற்றின் கரையில் நாவல் மரம் ஒன்று இருந்தது. அம்மரத்தில் ஒரு குரங்கு வசித்து வந்தது. அக் குரங்கு தினமும் நாவல் மரத்திலுள்ள பழங்களைத் தின்று வாழ்ந்துவந்தது. அவ்வாற்றில் இரண்டு முதலைகள் வசித்து வந்தன. அவற்றுள் ஆண் முதலை ஒன்று, பெண் முதலை ஒன்று. ஆண் முதலை தினமும் குரங்கிடம் வந்து அது தரும் நாவல் பழங்களை வாங்கிக்கொண்டு சிறிது நேரம் அதனுடன் உரையாடிவிட்டுச் செல் வது வழக்கம். இவ்வாறு குரங்கு, முதலை இவ்விரண்டின் நட்பு அதிகரித்து வந்தது.

ஒரு நாள் முதலை, குரங்கு தந்த நாவல் பழத்தைப் பெண் முதலையிடம் கொடுத்தது. அதைச் சாப்பிட்ட பெண் முதலை இந்தப் பழமே இவ்வளவு சுவையுள்ளதாக இருக்கும் போது, இப்பழத்தையே சாப்பிட்டுவரும் குரங்கின் ஈரல் எவ்வளவு உருசியாயிருக்கும் என்று சொல்லி அதன் ஈரலைக் கொண்டு வரும்படி கூறிற்று. ஆண்முதலை பெண் முத

லைக்கு எவ்வளவோ புத்தி கூறிற்று. நண்பனுக்குத் துரோகம் செய்யலாமா? என்றது ஆயினும் அது கேளாதபடியால் 'சரி' என்று சொல்லி ஆண் முதலை, குரங்கினிடம் மிகவும் வருத்தத்துடன் சென்றது.

அதைக் கண்ட குரங்கு "இன்று நீ ஏன் வருத்தத்துடன் காணப்படுகிறாய்?" என்றது. அதற்கு அது "தினமும் நீ எனக்குத் தரும் பழத்தை என் மனைவியிடம் கொடுத்தேன். அதைச் சாப்பிட்ட அவள் "தினமும் இப் பழத்தை உண்கிறோமே, ஒருநாளாவது நமக்குப் பழம் தரும் குரங்குக்கு விருந்துவைக்க வேண்டாமா?" என்கிறாள். ஆனால் நாங்கள் தண்ணீருக்குள் வாழ்வதனால் அங்கே எப்படி உன்னை அழைத்துக்கொண்டு செல்வது என்பது எனக்குத் தெரியவில்லை" என்று கூறியது.

அதன் கனிவான வார்த்தைகளைக் கேட்ட குரங்கு 'இதற்காக நீகவலைப்படாதே, உன் மனைவியை இங்கு அழைத்துவா' என்றது. முதலை 'வேண்டாம், நீ என் முதுகில் ஏறிக்கொள். உன்னை நான் அழைத்துக் கொண்டு செல்கிறேன்' என்று சொன்னது.

அது கேட்ட குரங்கு 'சரி, அப்படியே செய்வோம்' என்றது. பிறகு குரங்கு முதலையின் முதுகில் ஏறிக்கொண்டு சென்றது.



முதலை தண்ணீரில் வெகு தூரம் சென்றபின், குரங்கு நம்மிடம் அகப்பட்டுக்கொண்டு விட்டது. இனி அது தப்பமுடியாது என்று எண்ணி 'இன்று உன்னை நான் கொல்லப் போகிறேன், அதனால்தான் உன்னை இங்கு அழைத்து வந்தேன்' என்றது. குரங்கு முதலையைப் பார்த்து 'நான் என்ன குற்றம் செய்தேன்'' என்று கேட்டது. முதலை, ''நீ தினமும் கொடுக்கும் பழங்களை என் மனைவியிடம் கொடுத்தேன். அவள் இப்

பழமே இவ்வளவு சுவையா யிருக்கிறதே! இதையே தின்றுவரும் உனது ஈரல் எவ்வளவு சுவையாயிருக்கும் என்று சொல்லி உனது ஈரலைக் கொண்டு வரும்படி கூறினாள். அதனால்தான் உன்னை அழைத்துக்கொண்டு போகிறேன்'' என்றது. அதுகேட்ட குரங்கு ''ஐயோ! நாம் எப்படித் தப்புவது'' என்று சிறிதுநேரம் சிந்தனையிலாழ்ந்தது. பிறகு முதலையைப்பார்த்து ''ஐயோ! இதை நீ அப்பொழுதே கூறியிருக்கக்கூடாதா; நான் என் ஈரலை மரக்கிளையில் அல்லவா மாட்டி வைத்திருக்கிறேன்'' என்றது. முதலை ''அப்படியானால் சரி, வா போய் அதை எடுத்துக்கொண்டு வருவோம்'' என்று சொல்லிக் கரையருகே வந்தது.

குரங்கு உடனே மரத்தில் தாவிக்கொண்டு ''அடே மூடா! நான் என்னுடைய ஈரலை மரக்கிளையில் மாட்டிவிட்டு உன்னுடன் உயிருடன் வரமுடியுமா? இதை நீ யோசிக்கவில்லையே? 'ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு' என்பது உண்மைதான்'' என்றது.

முதலை, ஐயோ நம்வசம் இருந்த குரங்கை விட்டு விட்டோமே என்று வருந்தி, ''நண்பா,

உனது நட்பைச் சோதிப்பதற்கே இவ்வாறு செய்தேன். ஈரல் உடலைவிட்டு நீங்காது என்பது எனக்குத் தெரியாதா? நான் விளையாட்டிற்குச் சொன்னேன். அது குறித்து நீ கவலைப்படாதே! வா எனது வீட்டிற்கு" என்று நயமாகக் கூறிற்று. ஆனால் குரங்கோ "நீ இப்பொழுதே இங்கிருந்து போய்விடு. இல்லையெனில் உன் தலையில் பெருங்கல்லைத் தூக்கிப் போட்டுக் கொன்றுவிடுவேன்" என்றது. முதலை ஒன்றும் பேசாமல் குரங்கினிடம் ஏமாந்து வெட்கத்துடன் சென்றது.

---

**அருஞ்சொற் பொருள்:** ஈரல் = குடல், புத்திமட்டு = புத்திக்குறைவு, சிந்தனை = எண்ணம்.

**வினாக்கள்**

1. குரங்கும் முதலையும் எங்கே வசித்து வந்தன?
2. பெண்முதலை ஆண்முதலையிடம் என்ன கூறிற்று?
3. முதலை குரங்கைத் தன் இருப்பிடத்துக்கு என்ன சொல்லி எவ்வாறு அழைத்துச் சென்றது?
4. குரங்கு முதலையிடமிருந்து எப்படிப் பிழைத்தது?
5. இக்கதையால் தெரியும் நீதி என்ன?

## பயிற்சிகள்

1. நீ என்பது முன்னிலை ஒருமைப் பெயர். நீர், நீங்கள் என்பன முன்னிலைப் பன்மைப் பெயர்கள்.

   நீ — கவலைப்படாதே

   நீங்கள் — கவலைப்படாதீர்கள்

இவ்வாறே பின்வரும் பகுதிகளைப் பூர்த்தி செய்:

| | |
|---|---|
| நீ — செய்தாய் | நீங்கள் ———— |
| நீங்கள் — ———— | நீ — நடக்கிறாய் |
| நீ — படிப்பாய் | நீங்கள் ———— |

2. இப்பாடத்திலிருந்து நான்கு வினைமுற்றுக்களையும், இரண்டு பெயரெச்சங்களையும் எழுது.

3. இப்பாடத்திலிருந்து வினா வாக்கியம், செய்தி வாக்கியம், உணர்ச்சி வாக்கியம் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வோர் உதாரணம் எழுது.

4. பின்வரும் சொற்களைப் பன்மைகளாக மாற்று:— வினவிற்று, சென்றது, சொன்னேன், கூறியது, கேட்டது, கொடுத்தேன், செல்கிறேன்.



## 25. புருக்கள் ஒற்றுமை



இட்டதோர் தாம ரைப்பூ

இதழ்விரிந் திருத்தல் போலே

வட்டமாய்ப் புருக்கள் கூடி

இரையுண் ணும்; அவற்றின் வாழ்வில்

வெட்டில்லை; குத்து மில்லை;

வேறுவே(று) இருந்த குந்தும்

கட்டில்லை; கீழ்மேல் என்னும்

கண்மூடி வழக்கம் இல்லை.

## புருக்கள் அன்பு



தாய்இரை தின்ற பின்பு
தன்குஞ்சு கூட்டிற் கண்டு
வாயினைத் திறக்கும்; குஞ்சு
தாய்வாய்க்குள் வைக்கும் மூக்கைத்;
தாய்அருந் தியதைக் கக்கித்
தன்குஞ்சின் குடல்நி ரப்பும்;
ஓய்ந்ததும் தந்தை ஊட்டும்!
அன்புக்கோர் எடுத்துக் காட்டாம்!

— கவிஞர் பாரதிதாசன்.

அருஞ்சொற் பொருள் :

1. இரை = ஆகாரம், வெட்டு = சண்டை, அருந்தும் = சாப்பிடும், கட்டு = தடை.

2. கக்கி=உமிழ்ந்து, எடுத்துக்காட்டு=உதாரணம்.

## வினாக்கள்

1. புறாக்கள் எப்படி இரை தின்னும் ?
2. புறாக்களிடம் எவ்வகைக் கண்மூடி வழக்கம் இல்லை ?
3. புறாக்கள் தம் குஞ்சுகளுக்கு எப்படி உணவு ஊட்டும் ?
4. அன்புக்கோர் உதாரணம் எது ?

## பயிற்சிகள்

1. பூ என்பது ஓரெழுத்தாலான ஒரு மொழி.

   இதுபோல வேறு இரண்டு ஓரெழுத்தொரு மொழி எழுது.

2. இரை - இறை ; மணம் - மனம் ; வாள் - வால், கறை - கரை — இவற்றின் வேறுபாடுகளை விளக்கி வாக்கியங்களில் அமைத்து எழுது.

3. தின்ற, கண்டு, கூடி, இருந்து — இவற்றில் பெயரெச்ச வினையெச்சங்களைக் காட்டு.



# செய்யுட் பகுதி

---

## கடவுள் வாழ்த்து

**உலகெலாம் உணர்ந்து ஓதற்(கு) அரியவன்**
**நிலவு லாவிய நீர்மலி வேணியன்**
**அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்**
**மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.**

— சேக்கிழார்.

இப்பாடலை இயற்றியவர் சேக்கிழார் என்பவர். இவர் பெரிய புராணம் என்னும் நூலை இயற்றி யுள்ளார்.

அருஞ்சொற் பொருள் :

ஓதற்கு = சொல்வதற்கு, அரியவன் = அருமையானவன், நிலவு + உலாவிய = நிலவுலாவிய = பிறைச்சந்திரனைத் தரித்துள்ள, வேணி = சடை, அலகு இல் = அளவு இல்லாத, சிலம்பு + அடி = சிலம்படி = சிலம்பு அணிந்த பாதங்கள்.

---

## திருக்குறள்

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. (1)

கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்ருள் தொழாஅர் எனின். (2)

மலர்மிசை ஏகினுன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். (3)

வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல. (4)

இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. (5)

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்ருர் நீடுவாழ் வார். (6)

தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கல்லால்
மனக்கவலை மாற்றம் அரிது. (7)

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது. (8)

கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை (9)

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார். (10)

— திருவள்ளுவர்

அருஞ்சொற் பொருள் :

1. அகரம் = 'அ' என்னும் எழுத்து, முதல = முதலாக உடையன, ஆதிபகவன் = முதன்மையான கடவுள்.

2. வால் = தூய்மை, வாலறிவன் = கடவுள், நல் + தாள் = நற்றாள், தாள் = திருவடி.

3. மலர் மிசை = மலரின் மீது, மாண் = பெருமை, நீடு = நெடுநாள் (சிறப்புடன்).

4. வேண்டுதல் = விருப்பு, வேண்டாமை = வெறுப்பு, யாண்டும் = எப்பொழுதும்.

5. இருள்சேர் = துன்பம் பொருந்திய, இருவினை = நல்வினை தீவினைகள், புகழ் புரிந்தார் மாட்டு = புகழை விரும்பியவரிடம்.

6. பொறிவாயில் = ஐம்புலன்கள், அவித்தான் = அடக்கியவன், பொய்தீர் = குற்றமற்ற.

7. உவமை = ஒப்பு, மாற்றல் = நீக்குதல்.

8. அறம் + ஆழி = அறவாழி, ஆழி = சக்கரம், ஆழி = கடல், நீந்தல் = தாண்டுதல்.

9. கோள்இல் = குற்றம் இல்லாத, எண் குணத்தான் = கடவுள்.

———

## நீதிப் பகுதி

### நன்னெறி

மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி(து) ஏனையவர்
பேசுற்ற இன்சொல் பிறிதென்க — ஈசற்கு
நல்லோன் எறிசிலையோ? நன்னுதால்; ஒண்கருப்பு
வில்லோன் மலரோ? விருப்பு. (1)

நீக்கம் அறுமிருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கின் அவர் பெருமை நொய்தாகும்-பூக்குழலாய்
நெல்லின் உமிசிறிது நீங்கிப் பழமைபோல்
புல்லினும் திண்மை நிலை போம். (2)

உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க — வெள்ளம்
தடுத்தல் அரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு. (3)

தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா(து) உலகின்
நிறையிருளை நீக்குமேல் நின்று. (4)

தொலையாப்பெருஞ்செல்வத் தோற்றத்தோம் என்று
தலையா யவர்செருக்குச் சார்தல் — இலையால்
இரைக்கும்வண் (டு) ஊதுமலர் ஈர்ங்கோதாய் மேரு
வரைக்கும் வந்தன்று வளைவு. (5)

இல்லானுக்(கு) அன்பிங்(கு) இடம்பொருள் ஏவல்மற்(று)
எல்லாம் இருந்தும் அவற்(கு) என்செய்யும் - நல்லாய்
மொழியிலார்க் கேது முதுநூல் தெரியும்
விழியிலார்க் கேது விளக்கு. (6)

எந்தை நல்கூர்ந்தான் இரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் ஈகை மறுப்பரோ ?—பைந்தொடீஇ,
நின்று பயனுதவி நில்லா அரம்பையின் கீழ்க்
கன்றும் உதவும் கனி. (7)

இன்சொலால் அன்றி இருநீர் வியனுலகம்
வன்சொலால் என்றும் மகிழாதே—பொன்செய்(து)
அதிர்வளையாய்! பொங்கா தழற் கதிரால்; தண்ணென்
கதிர்வரவால் பொங்கும் கடல். (8)

பெரியவர்தம் நோய்போல் பிறர்நோய் கண்(டு) உள்ளம்
எரியின் இழுதாவர் என்க—தெரியிழாய்,
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண். (9)

முனிவினும் நல்குவர் மூதறிஞர் ; உள்ளக்
கனிவினும் நல்குவர் கயவர்— நனிவிளைவில்
காயினும் ஆகும் கதலிதான் எட்டிபழுத்(து)
ஆயினும் ஆமோ அறை. (10)

— சிவப்பிரகாச சுவாமிகள்.

## நீதிவெண்பா

அருஞ்சொற் பொருள் :

நன்னெறி :- இந்நூலை இயற்றியவர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் என்பவர். மக்கள் வாழ்வுக்குரிய நல்ல வழிகளை விளக்கிக் கூறும் நூல் நன்னெறியாகும்.

1. மாசு = குற்றம், ஏனையவர் = மற்றவர், நல்லோன் = சாக்கிய நாயனர், சிலை = கல், ஒண் = சிறந்த, கரும்பு + வில் = கருப்பு வில், கரும்பு வில்லோன் = மன்மதன்.

2. புணர்ந்தாலும் = கூடினாலும், நொய்து = அற்பம், குழல் = கூந்தல், புல்லினும் = சேர்ந்தாலும், திண்மை = வலிமை.

3. கவர்ந்து = தன்வசப்படுத்திக் கொண்டு, தடங்கரை = பெரியகரை, விளம்பு = சொல்.

4. உள்ளார் = எண்ணாதவராய், விழுமியோர் = பெரியோர், திங்கள் = சந்திரன்.

5. தொலையா = அழியாத, தோற்றத்தோம் = பிறப்பினை உடையோம், சார்தல் = அடைதல், கொள்ளல், இரைக்கும் = ஒலிக்கின்ற, ஈர்ங்கோதாய் = குளிர்ந்த மாலை அணிந்தவளே, (ஈரம் + கோதாய் = ஈர்ங்கோதாய்)

6. இங்கு அன்பு இல்லானுக்கு என்று மாற்றவும். ஏவலாளர் = வேலைக்காரர், மொழியிலார் = ஊமைகள், ஏது = என்னபயன்? விழி = கண்.

7. நல்கூர்ந்தான் = வறுமை அடைந்தான், பைந் தொடீஇ = பசும் பொன்னால் செய்யப்பட்ட வளையலை அணிந்தவளே! அரம்பை = வாழை, கனி = பழம்.

8. இருநீர் = சமுத்திரம், வியன் உலகம் = பெரிய உலகம், அதிர் = ஒலிக்கும், அழல்கதிர் = சூரியன், தண்கதிர் = சந்திரன்.

9. எரியின் = நெருப்பில்பட்ட, இழுது = நெய், தெரியிழாய் = தேர்ந்தெடுத்த ஆபரணம் அணிந்தவளே, மண்டு = மிகுந்த, கண்கலு ழும் என்று மாற்றவும், கலுழும் = அழும்.

10. முனிவினும் = கோபத்திலும், நல்குவர் = கொடுப் பர், கயவர் = அற்பர்கள், நனி = நன்றாக, விளைவுஇல் = முற்றாத, கதலி = வாழை, அறை = சொல்.

---

## நீதி வெண்பா

அரிமந் திரம்புகுந்தால் ஆனை மருப்பும்
பெருகொளிசேர் முத்தும் பெறலாம் — நரிநுழையில்
வாலும் சிறிய மயிரெறும்பும் கர்த்தபத்தின்
தோலுமல்லால் வேறுமுண்டோ சொல். (1)

கண்ணிரண்டே யாவர்க்கும் கற்றோர்க்கு மூன்றுவிழி
எண்ணுவிழி ஏழாகும் ஈவோர்க்கு - நண்ணும்
அநந்தம் தவத்தால் அருள்ஞானம் பெற்றோர்க்(கு)
அநந்தம் விழியென் றறி. (2)

கொம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக்(கு) ஆயிரந்தான் வேண்டுமே வம்புசெறி
தீங்கினர்தம் கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி. (3)

ஆனை மருப்பும் அருங்கவரி மான்மயிரும்
கான வரியுகிரும் கற்றோரும் — மானே
பிறந்தஇடத் தன்றிப் பிறிதொருதே சத்தே
செறிந்த இடத் தன்றோ சிறப்பு. (4)

பொன்னும் கரும்பும் புகழ்பாலும் சந்தனமும்
சின்னம் படவருத்தம் செய்தாலும்-முன்னிருந்த
நற்குணமே தோன்றும் நலிந்தாலும் உத்தமர்பால்
நற்குணமே தோன்றும் நயந்து. (5)

அருஞ்சொற் பொருள் :

1. அரி=சிங்கம், மந்திரம்=குகை, மருப்பு=தந்தம், நரிநுழை=நரி வசிக்கும் இடம், கர்த்தபம்= கழுதை.

2. விழி = கண், ஈவோர் = கொடுப்பவர் (தருமஞ் செய்பவர்.) அனந்தம் = அளவற்றது, ஞானம் = நல்லறிவு.

3. கொம்புளது = ஆடு, மாடு போன்ற மிருகங்கள், வெம்புகரி = கோபம் மிக்க யானை, வம்பு = சண்டை (தீமை).

4. கானவரி = காட்டில் வாழும் புலி, உகிர் = நகம். செறிந்த = அடைந்த, சேர்ந்த, மானே — மகடூஉ முன்னிலை.

5. சின்னம்பட = நிலைகுலையும்படி, நலிந்தாலும் = துன்புற்றாலும், நயந்து = விரும்பி.

———

## குமரேச சதகம்

### நல்லவரை நட்பு கொள்ளல்

சந்தன விருட்சத்தை அண்டி நிற் கின்றபல
தருவும்அவ் வாசனை தரும்
தங்கமக மேருவை அடுத்திடும் காக்கையும்
சாயல்பொன் மயமேதரும்
பந்தமிகு பாலுடன் விளாவிய தணீரெலாம்
பால்போல் நிறங்கொடுக்கும்
படிகமணி கட்குளே நிற்கின்ற வடமுமப்
படியே குணங்கொடுக்கும்
அந்தமிகு மரகதக் கல்லைத் தரித்திடில்
அடுத்ததும் பசுமையாகும்
ஆனபெரி யோர்களொடு சகவாசம் அதுசெயின்
அவர்கள்குணம் வருமென்பர்காண்
மந்தர நெடுங்கிரியன் முன்கடல் கடைந்த அரி
மருகமெய்ஞ் ஞான முருகா !
மயிலேறி விளையாடு குகனே ! புல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே.

— குருபாத தாசர்.

அருஞ்சொற் பொருள்: விருட்சம்=மரம், தரு=மரம், பந்தம் = பற்று, ஆசை, விளாவிய =கலந்த, வடம் = நூல், மரகதம் = பச்சைக்கல், (நவரத்தினங்களில் ஒன்று), கிரி = மலை, அரி = திருமால்.

## தண்டலையார் சதகம்

### செவிடன் காதில் ஊதும் சங்குக்குச் சமமானவை

பரியாமல் இடுஞ்சோறும் ஊமைகண்ட
கனவும்ஒன்று பரிசில் ஈயான்
அரிதான செந்தமிழின் அருள்சிறிதும்
இல்லாதான் அறிவு மேதான்
கரிகாலன் பூசைபுரி தண்டலைநீள்
நெறியாரே கதித்த ஓசை
தெரியாத செவிடன்கா தினில்சங்கு
குறித்ததெனச் செப்ப லாமே,

— படிக்காசுப் புலவர்

அருஞ்சொற் பொருள்: பரியாமல் = அன்பில்லாமல், ஈயான் = கொடுக்காதவன், கதித்த = கேட்கப்படும், குறித்தது = ஊதியது.

———

## பஞ்சதந்திரம்

### காகமும் நாகமும்

1. கோடுறு சினையில் காகம்
கூடுவைத்(து) அநேக காலம்
பேடொடு கூடி வாழும்
பெருமரப் பொந்தில் வந்தே
ஆடிய கரும்பாம்(பு) ஒன்றுஅங்கு
அதுபெறும் முட்டை எல்லாம்
நாடியே குடித்துப் போட
நலிந்துளம் மெலிந்து வாடி.

2. தன்உயிர்ப் பாங்கன் ஆன
சம்புகன் அருகு போய்'இங்(கு)
என்னசெய் குவன்நான்?' என்ன
இதைக்கொல்ல அரிதோ! நீ போய்
மன்னவன் தேவி ஆடும்
மஞ்சனச் சாலை புக்குப்
பொன்அணி கொண்டு வந்து
போடுக பொந்தில் என்ன.

3. காகம்அப் படியே செய்யக்
காவலன் ஏவ லாளர்
ஏகிமா மரத்தின் பொந்தை
ஈர்ந்தனர் ஈரும் போதில்
நாகம்அங் கிருந்து சீற
நறுக்கினர் இருதுண் டாக
ஆகையால் உபாயத் தாகா
தில்லையென அறையும் பின்னும்.

— வீரமார்த்தாண்ட தேவர்.

அருஞ்சொற் பொருள்:

1. கோடு=கிளை, பேடு=பெண்காகம், நாடி=கண்டு.
2. பாங்கன்=தோழன், சம்புகன்=நரியின் பெயர்.
மஞ்சனச் சாலை=நீராடுமிடம், அணி=நகை.
3. ஏகி = சென்று, மா = பெரிய, ஈர்ந்தனர் = பிளந்தனர். ஈரும் போதில் = பிளக்கும் (வெட்டும்) போது.

## விவேக சிந்தாமணி

### அன்பில்லா விருந்து

ஒப்புடன் முக மலர்ந்தே
உபசரித் துண்மை பேசி
உப்பிலாக் கூழிட் டாலும்
உண்பதே அமுத மாகும்;
முப்பழ மொடுபால் அன்னம்
முகங்கடுத் திடுவ ராயின்
கப்பிய பசியி னோடு
கடும்பசி யாகுந் தானே.

### அறிஞர் பெருமை

அறிவுளோர் தமக்கு நாளும்
அரசரும் தொழுது சார்வார்;
நிறையொடு புவியி னுள்ளோர்
நேசமாய் வணக்கஞ் செய்வார்;
அறிவுளோர் தமக்கு யாதோர்
அசடது வருமே யாகில்
வெறியர்என் றிகழார் என்றும்
மேதினி யுள்ளோர் தாமே.

அருஞ்சொற் பொருள்: முகமலர்ந்து = முக மகிழ்ச்சி யுடன், அன்னம் = சோறு, கடுத்து = வெறுத்து, கப்பிய=மிகுந்த, புவி=உலகம், அசடு=குற்றம்(தவ=), மேதினி=உலகம்.

---

## தனிப்பாடல்கள்

சித்திரமும் கைப்பழக்கம்; செந்தமிழும் நாப்பழக்கம்;
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்;— நித்தம்
நடையும் நடைப்பழக்கம்; நட்பும் தயையும்
கொடையும் பிறவிக் குணம். (1)

வேழம் உடைத்து மலைநாடு; மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து;—பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்து; தெண்ணீர் வயல் தொண்டை
நன்னாடு சான்றோர் உடைத்து. (2)

அருஞ்சொற் பொருள்:

1. தயை = கருணை (இரக்கம்).
2. வேழம் = யானை, மலைநாடு = சேரநாடு, மேதக்க = மேன்மை பொருந்திய, பூழியர் = பாண்டியர், கோன் = தலைவன், சான்றோர் = அறிவுநிறைந்த மேலோர்.




PRINTED AT THE CAXTON PRESS, MADRAS - 1954